உ
வேலுமயிலுந் துணை

ஆதிதுறை என்னும் காரியானூர்

ஸ்ரீ நடேச ஞான தேசிகர்

# தோத்திரத் திரட்டு

இது
பல அன்பர்களால் இயற்றப்பெற்றுப்
பல அன்பர்களுடைய பொருளுதவியைக்
கொண்டு மேற்படி ஸ்ரீ நடேச ஞான தேசிகர்
திருவடித் தொண்டர்

**திரு. ந. அரங்கசாமி ஐயா அவர்களால்**

அச்சிட்டு வெளியிடப்பட்டது.

கிடைக்குமிடம் :

**சாந்தி ஆச்சிரமம்,**
காரியானூர்,
பெரம்பலூர் தாலுகா :: திருச்சிமாவட்டம்.

 1964 [விலை 75 காசுகள்

Thiru N. Rangaswamy Ayya Avargal



Ed 1 March 1964

# NATESA GNANA DESIGAR THOTHIRA THIRATTU

Paari Achakam, Madras-1.

# முகவுரை



மெய்ஞ்ஞானப் பெருந்தகையாக விளங்கி யிருந்து வீடு பேற்றை யடைந்த எம் குருநாதர்மீது அன்பர்கள் பலரைக் கொண்டு குருநாதருடைய புகழ்ப்பாக்கள் இயற்றச் செய்து அதனை வெளியிட்டுக் குருநாதருடைய பெருமையை அனைவரும் அறியுமாறு செய்யவேண்டு மென்னும் எண்ணம் அடியேனுடைய உள்ளத்தில் உண்டாகியது. என் எண்ணத்தைப் பல அன்பர்களிடங் கூறினேன். என் வேண்டுகோட் கிணங்கி அவர்கள் பாடல் இயற்றித் தந்தனர். பல அன்பர்களுடைய உதவியைக் கொண்டே இதனை அச்சிட்டு வெளியிட வேண்டியதாக இருந்தபடியால் அச் செலவுக்கு வேண்டிய பொருளையும் அன்பர்களிடம் வசூல் செய்தேன்.

இந் நூல் வெளிவருதலிற் பொருமைகொண்ட சிலர் அடியேனுடைய காரியங்கட்கு இடையூறு செய்யலாயினர். ஆயினுங் குருநாதருடைய திருவருளால் அவ்விடையூறுகளை யெல்லாம் பொருட்படுத்தாது நூலை முடித்துவிட்டேன். இத்தகைய காரியங்களில் தலையிடுதற்கு அடியேனுக்கு அறிவாற்றல் போதாதாயினும் குருநாதர் திருவருளைக் கொண்டும் மெய்யடியார்களுடைய வாழ்த்துரையைக் கொண்டும் ஒருவாறு செய்து முடித்தேன். என் விருப்பத்திற் கிணங்கிப் பாடலியற்றித் தந்த அன்பர்கட்கும், பொருள் உதவி புரிந்த அன்பர்கட்கும், இதனை நன்முறையில் அச்சிடுதற்கு உதவிபுரிந்த கருப்பக்கிளர் திரு. சு. அ. இராமசாமிப் புலவர் அவர்கட்கும் எனது மனமார்ந்த நன்றியறிதலைத் தெரியப்படுத்திக் கொள்ளுகிறேன்.

கோயிலூர்ப் பரம்பரையில் புகழ்பெற்று விளங்கிய பெரியவர்களுள் திருக்களரில் சமாதியடைந்துள்ள ஸ்ரீலஸ்ரீ நாராயண சுவாமிகள் அவர்களும் ஒருவர். ஆகவே, அப்பெரியாருடைய படத்தையும் இதிற் சேர்த்திருக்கிறேன்.

இப்படிக்கு,
அடியார்க்கடியேன்,
**ந. அரங்கசாமி.**

## பொருளடக்கம்





காரியானூர் என்னும் ஆதிதுறையில் திருக்கோயில்
கொண்டருளிய
உயர்திரு. நடேச ஞானதேசிகர் அவர்கள்

10-4



உயர்திரு. நடேச ஞான தேசிகர் அவர்களின்
திருவடித்தொண்டர்
திரு. அரங்கசாமி ஐயா அவர்கள்.



திருக்களர் உயர்திரு. நாராயண சுவாமிகள் அவர்கள்

உ

சிவமயம்

# ஸ்ரீ நடேசஞான தேசிகர் வரலாறு

---

## தோற்றம்

திருச்சிராப்பள்ளி மாவட்டத்திலே முசிறிப்பிரிவில் துறையூருக்கு அண்மையில் உள்ள மதுராபுரி என்னும் சித்திரப்பட்டியில் தெய்வீகராசன் வழிமுறையில் இப்பெரியார் ஆங்கிலம் ஆயிரத்து எண்ணூற்றுத் தொண்ணூற்றெட்டுக்குச் சரியான விளம்பியாண்டு புரட்டாசித்திங்கள் பதினுன்காம்நாள் இப்பூவுலகில் தோன்றியருளினர். இப்பெரியாரை ஈன்றருளிய தாயாரின் பெயர் விசாலாட்சியம்மையார்; தந்தையார் பெயர் சபாபதி உடையார்.

## கல்விகற்றல்

இப்பெரியார் வயது ஐந்து நிறைந்தவுடன் "ஐயாண்டளவிலே மையேடு கைப்பிடி" என்னும் சீரியமுதுமொழிக் கிணங்கக் கல்விகற்கத் தொடங்கினர். சோமசுந்தரஐயர் என்ற வீரசைவரிடந் தமிழ் நெடுங்கணக்கில் இருந்து படிக்கலானர். அக்கால வழக்கப்படி நீதிநூல்கள், சதகங்கள், புராணங்கள் முதலியவைகளை நன்கு கற்ருர். இரவில் நீண்டநேரம் வீட்டில் இருந்து படித்தால் பிறருடைய உறக்கத்திற்கு இடையூருக இருக்குமென்று தெருவிளக்கின் வெளிச் சத்திலும் இரவு நேரங்களிற் படித்தார். வயது பதினன்கு முடிவடைவதற்குள் பள்ளிப்படிப்பு முடிவு பெற்றது.

**துறவு**

மேற்கூறியபடி கல்விகற்று முடிந்தபிறகு சில ஆண்டுகள் இல்லத்தில் தங்கியிருந்தார். பிறகு இவருடைய உள்ளம் பலவகையான ஆராய்ச்சிகளில் ஈடுபட்டது. முடிசார்ந்த மன்னரும் மற்றுமுள்ளோரும் முடிவிலொரு, பிடிசாம்பராய் வெந்து மண்ணுவதுங் கண்டு பின்னுமிந்தப், படிசார்ந்த வாழ்வை நினைவதல்லாற் பொன்னின் அம்பலவன், அடிசார்ந்து நாம் உய்ய வேண்டுமென்றறி வாரில்லையே'' என்று பெரியோர்கள் பாடியுள்ளார்கள். மற்றவர்களைப்போல் நாமும் இவ்வுலக வாழ்க்கையில் ஈடுபட்டு மானிடயாக்கை எடுத்த தன் பலனை அடையாமல் அவமே உலகவாழ்க்கையில் சிக்கி வாணுளை வீணுளாக்கக்கூடாது. வீடுபேறடைதற்கான வழியைத்தான் நாடவேண்டும் என்று எண்ணமிட்டுக் கொண்டிருந்தார்.

**அண்ணுமலையை அடைதல்**

கருவண்ணு நிலையை அளிப்பது திருவண்ணுமலை. திருவாரூரிற் பிறந்தாற்ருன் வீடுபேறு. திருத்தில்லையைப் போற்றி வழிபட்டால்தான் வீடுபேறு. காசியில் இறந்தால்தான் வீடுபேறு. இவைகளெல்லாம் மிக முயன்று அடையத் தக்கன. ஆனுல் திருவண்ணுமலை அப்படியன்று. யார் எந்த இடத்தில் இருந்து எண்ணிஞலுஞ்சரி, அவர்கட்கெல்லாம் வீடுபேற்றையளிக்கும் மேலான சிறப்புடையது. மெய்ஞ்ஞானத்தைப் பெற விரும்புவோரைத் திருவண்ணுமலை வாவென்றழைத்து வீடுபேற்றைக் கொடுக்கும். 'இதனைக் கருதியே பெரியோர்கள் இம்மலையை, "ஞானத்த போதனரை வாவென்றழைக்கும்மலை அண்ணுமலை'' என்று பாராட்டியுள்ளனர். குகைநமச்சிவாய தேவர், குருநமச்சிவாய தேவர், அருணகிரிநாதர் முதலியோர்கள் அந்நாளில் தங்கியிருந்து வீடுபேற்றையடைந்தார்கள். இந்நாளில் நமது

கண்கள்காண சேஷாத்திரி சுவாமிகள், இரமண மக ரிஷிகள் முதலிய மகான்கள் இப்புண்ணியத் தலத்தில் எழுந்தருளியிருந்து வீடுபேற்றையடைந்தார்கள். இல் லந் துறந்தேகவிரும்பியிருந்த நம் நடேசனாரவர்களையும் அண்ணாமலை வாவென்றழைத்தது. வயது பதினாறு நடந்துகொண்டிருக்கும்போது இவர் "நல்லவனுக் கடையாளம் சொல்லாமற் போவதுதான்" என்னும் பழமொழிக்கிணங்க உறவினர் எவர்க்கும் உரையாது புறப்பட்டுத் திருவண்ணாமலையை அடைந்தார். அண்ணாமலையை அண்ணிய இவர் அண்ணாமலையாரின் திருக்கோவிலையடைந்து திருமலர்த்தொண்டு செய்து கொண்டு திருக்கோவிலிலேயே தங்கியிருந்தார்.

## ஈசான்யமடத்தை எய்துதல்

அந்நாளில் ஈசானியமடத்தில் தங்கியிருந்த அடி யார்கள் அண்ணாமலையார் கோவிலுக்குச் செல்லும போதெல்லாம் இவரைக்கண்டு உரையாடுவர். பின் னாளில் இவர் முன்னுக்குவந்து சிறப்படையக்கூடியவர்; இவரைக் கொண்டுபோய் நம்முடைய ஆசிரியரிடஞ் சேர்க்கவேண்டும் என்று எண்ணிய அவர்கள், ஒரு நாள் ஈசான்யமடத்திற்கு அழைத்துக்கொண்டுபோய் அப்பொழுது அங்கு மடாலயத்தலைவராக வீற்றிருந்த மகாதேவ சுவாமிகள் என்னும் பெரியார்பாற் சேர்த் தனர்.

## அறிவுநூல் கற்றல்

மகாதேவ சுவாமிகள் இவரைத் தம்முடைய அடியார் திருக்கூட்டத்தோடு சேர்த்து அறிவுநூல் களைக் கற்பித்தார். நாநாசீவ வாதக்கட்டளை, கீதா சாரத் தாலாட்டு, சசிவன்ன போதம், மகாராசா துறவு, வைராக்கிய சதகம், வைராக்கிய தீபம், வேதாந்த சூடாமணி, கைவல்யநவநீதம், பகவத்கீதை, ஞான

வாசிட்டம் முதலிய நூல்களை நம் சுவாமிகள் அப் பெரியார்பால் கற்றுத் தேறினர். சுவாமிகளை மேலும் அறிவாளியாக்க வேண்டுமென்று எண்ணிய மகாதேவ சுவாமிகள் பிறரிடமும் நூல்களை ஓதியுணரச் செய்தனர். அம்முறையில் திருவளர் சோலை சுப்பராய சுவாமிகள் என்னும் பெரியாரிடம் சிலகாலந் தங்கிச் சில நூல்களை ஓதியுணர்ந்தனர். வடமொழி கற்ற சாதுக்க ளிடமிருந்து வடமொழியையுங் கற்றுத் தேர்ச்சியடைந்தார். பிறகு அம்பாசமுத்திரம் ஆத்து மாநந்த சுவாமிகள் என்னும் பெரியாரிடம் தமிழ் இலக்கண இலக்கியங்களை நன்கு கற்றுச் செய்யுள் பாடுந்திறமடைந்தார்.

## மடாலயத் தலைவராதல்

சுவாமிகளின் ஆசிரியராகிய மகாதேவ சுவாமிகள் கோவிலூர் மடாலயத்தின் தலைமைப் பதவியை ஏற்று அங்கு சென்றபொழுது, தம்முடைய மாணவர்களிற் சிறந்துவிளங்கிய இவரை மடத்தின் தலைவராக இருக்கச் செய்துவிட்டுச் சென்றார். அப்பொழுது நம் சுவாமி கட்கு வயது இருபத்துமூன்று.

## பெருமையின்மை

சுவாமிகள் மடாலயத் தலைவராக இருந்தும் பெரு மிதமாக நடந்துகொள்ளவில்லை. அடக்கத்துடனும் பொறுமையுடனும் நடந்துகொண்டார். நாம் மடத் தின் தலைவராகையால் அதற்கேற்ற சிறப்போடு நடந்து கொள்ளவேண்டும் என்னும் எண்ணம் சுவாமி கள் பால் என்றும் உண்டானதில்லை. மடத்தில் உள்ள பிற அடியார்களைப்போன்றே தாமும் நடந்துகொண் டார். அடியவர்கட்கு அறிவுநூல்களை நன்கு போதித் தார். நூல்களை ஆராய்தல், அறிதுயிலில் அமர்ந்திருத் தல், உரையடக்கல், வீண்பொழுது போக்காமை

முதலியன சுவாமிகள்பால் தனிச் சிறப்பாக அமைந்திருந்தன. மடத்தின் ஆட்சிமுறை சிறப்போடு விளங்கியதே தவிர அதிற் சிறிதுங் குறைவு நேரவில்லை. "எத்தொழிலைச் செய்தாலும் ஏதவத்தைப்பட்டாலும் முத்தர் மனமிருக்கு மோனத்தே—வித்தகமாய்க், காதி விளையாடி இருகைவீசி வந்தாலும், தாதிமனம் நீர்க் குடத்தே தான்." என்பதற்கேற்பச் சுவாமிகள் எப் பணியில் நின்றாலும் தம்முண்மை வடிவத்தை நன் குணரும் நிலையில் இருந்து சிறிதும் மாறுபடவில்லை.

## துறவுக்குமேல் துறவு

இல்லறத்திற் கட்டுண்டு சிக்கிக்கிடத்தல் இரும்பு விலங்காற் பிணிப்புண்டு கிடத்தலைப் போன்றதாமெனின்; மடத்தின் தலைமைப் பதவியைப்பூண்டு அதனிற் சிக்குண்டுகிடத்தல் பொன்விலங்காற் கட்டுண்டு கிடத்தலைப்போன்றதாம். மடத்தின் தலைமைப் பதவியும் பலவகையான தொல்லைகட்கும் எல்லைகட்கும் இடனாக அமைந்ததாம். இதனை நன்குணர்ந்திருந்த சுவாமிகள் மடத்தின் தலைமைப் பதவியில் இருந்து விடுபட்டேக எண்ணினார். யாரிடமும் எதுவும் உரையாமல் மடத்தைத் துறந்து வெளியேறிக் குகையொன்றிற் சிலகாலம் அமர்ந்திருந்தார். அருணையில் அண்ணாமலையார் குகை முதலியவிடங்களில் தங்கியிருந்த சுவாமிகள் ஒருநாள் இரமண மகரிஷியைக் காணச் சென்றிருந்தார். "ஈசானிய மடாலயத் தலைவர் பதவியைத் துறந்து யாண்டோ சென்று வீட்டார் என்னுஞ் செய்தியை முன்னரே அறிந்திருந்த ரிஷிகள் சுவாமிகளைப் பாராட்டினார்'; இத்தகைய பெருந்துறவு வேண்டியதில்லை. மடத்தின் தலைவராக இருந்து எல்லாவற்றையும் பார்த்துக்கொண்டு தவமியற்றலே தக்கதாமென அறிவுரைகூறி மீண்டும் மடாலயத் தலைவராக அமர்ந்திருக்கச் செய்தார்.

**உணவு வழங்கல்**

அறங்களுட் சிறந்தது உணவிடும் அறமாம். அண்ணாமலையாருக்கு ஆண்டுக்கொருமுறை கார்த்திகைத் திங்களிற் பெருந்திருவிழா நடைபெறும். இறுதி நாளாகிய திருக்கார்த்திகையன்று மலைமேலிடும் விளக்கொளியைக் கண்டு வழிபடற்குப் பலவிடங்களினுமிருந்து பல்லாயிரக்கணக்கான மக்கள் திருவருணைக்கு வந்து கூடுவர். அத்தகையவர்களுள் பல துறவிகளுமிருப்பர். ஒவ்வோராண்டும் அருணையில்வந்து கூடுந் துறவிகட்கு உணவிடும் அறத்தைச் சுவாமிகள் மேற்கொண்டு நடத்தினர். பத்து நாட்களிலும் நாள் ஒன்றுக்கு ஆயிரம்பேர்வரை உண்டு மகிழ்வர். இவ்வுணவறம் அடிகளார்க்குப் பிறகும் சிறப்பாக நடைபெறுகிறது.

**ஆச்சாரியார் பாராட்டு**

சுவாமிகளுடைய குணநலன்கள் யாண்டும் பரவிச் சுவாமிகளுக்குப் புகழை வளர்த்து நின்றன. திருக்குடந்தைச் சங்கராச்சாரியார் சுவாமிகளுடைய பண்புடைமையை நன்கறிந்து சுவாமிகளைப் பார்க்கவேண்டுமென்று திருவுளத்தில் எண்ணியிருந்தார். திருவருணைக்கு வந்து மலைவலம் வந்தபொழுது, ஈசானிய மடத்தின் முன்புவந்து சுவாமிகளை அழைத்துப் பாராட்டியதோடு தம்கழுத்தில் இருந்த மலர்மாலையையும் கழற்றியணிந்து புகழ்ந்து பேசிச் சென்றார்.

**பொருளிற் பற்றின்மை**

சுவாமிகள் எஞ்ஞான்றும் பொருளிற் பற்றுக் கொண்டதில்லை. ஓடும் பொன்னும் ஒருபொருள்போல் ஒக்கநோக்கும் பீடுபெறு நிலையையே மேற்கொண்டிருந்தார். குரும்பேரி என்னுஞ் சிற்றூரில் இருந்த ஒரு மனிதர் இல்லந்துறந்து துறவியாகிவிட எண்ணினர்

தமக்கு உரிமையான பொருளையெடுத்துக்கொண்டு ஈசானியமடத்திற்கு வந்தார். சுவாமிகளிடம் துறவு நிலையைப் பெற்றுக்கொண்டார். தாம்கொண்டுவந்திருந்த பொருளை மடத்திற்குத் தானமாக வழங்கிவிட வேண்டும் என்னும் எண்ணத்தோடு மடத்தில் கொடுத்து வைத்திருந்தார். எதிர்பாராதவாறு சில நாட்களில் அவர் இறைவன் திருவடிநீழலையடைந்தார். அவ்வன்பர் காலமானதை அவருடைய குடும்பத்தினர் உணர்ந்தனர். பொருளை மடத்திற் கொடுத்திருத்தலையுணர்ந்த அவர்கள் மடத்திற்குவந்து அப்பொருளைத் தம்மிடம் தந்துவிடுமாறுகேட்டனர். மடத்தில் இருந்த அன்பர்கள் சிலர் அப்பொருளில் ஒரு பகுதியை எடுத்துக்கொண்டு மற்றதைக் கொடுத்துவிடலாம் என்றனர். ஆயினும் சுவாமிகள் அப்பொருளிற் சிறிது கூட விரும்பவில்லை. எல்லாவற்றையுங் கொடுத்து விடுமாறுகூறிக் கொடுத்துவிடச் செய்தனர்.

## மடாலயத் தலைமையைத் துறத்தல்

சுவாமிகள் ஈசானியமடத்தின் தலைவராக இருந்த நிலையில் அறிவுநூல்களை மாணவர்கட்குப் போதித்துக் கொண்டிருந்தனர். சென்ற சர்வதாரியாண்டில் ஞான வாசிட்டம் முழுமையையும் பாடம் நடத்தியருளினர். நூல் நிறைவேற்ற விழாவில் மாணவர்கள் சுவாமிகளைப் போற்றிப் பாராட்டி ஐநூறு வெண்பொற்காசுகள் வரை காணிக்கை வைத்தனர். சுவாமிகள் மடத்தின் தலைமைப்பதவியை வெறுத்துத் தனித்தேகிவிட எண்ணினர். எவ்வளவு உயர்ந்ததாக இருப்பினும் பதவியொன்று இருக்குமாயின் அது தொல்லையைத் தந்துகொண்டுதான் இருக்கும். மாணவர்கள் காணிக்கையாக வைத்த பொருளை ஈசானிய மடத்திற்குச் சேர்த்துவிட்டு மடத்தைவிட்டு வெளியேறிச் செல்ல விழைந்தனர். மடத்தில் தம்முடையனவாகக் கொண்

டிருந்த பொருள்களை எடுத்துக்கொள்ளவில்லை. இடையில் இருந்த உடையையுங் களைந்து மடத்தில் வைத்து விட்டு, அன்பர்கள் சிலர் தந்த ஆடையைக் கல்லாடையாக்கிப் புனைந்துகொண்டு வெளியேறினார். அப்பொழுது கையில் ஒருகாசும் இல்லை. அன்பர்கள், சுவாமிகள் மறுவேளை உணவுக்கோ வழிச்செலவுக்கோ பொருளில்லாது செல்கின்றார்களே என்றுகூறி உள்ளம் வருந்தினர். சுவாமிகள் அந்த அன்பர்களைப்பார்த்து, "மேயச்செல்கின்ற மாடு கொம்பிலே புல்லைக்கட்டிக் கொண்டா மேயச்செல்கின்றது?" என்று கூறிவிட்டுப் புறப்பட்டார். கோவிலூரையடைந்து தம்முடைய குருவின் திருக்கோவில் குடமுழுக்கைச் சிறப்பாக நடத்திவிட்டுச் சிலநாள் அங்கிருந்தார். பிறகு அங்கிருந்து புறப்பட்டு அம்பாசமுத்திரம் என்னும் ஊருக்குச்சென்று அங்கு அன்பர்கட்குப் பிரமகீதையைப் போதித்தார். பிறகு காரியானூர் என்னும் சீரிய ஆதிதுறையை அடைந்தார்.

## சாந்தி ஆசிரமம்

காரியானூர் என்பது வெள்ளாற்றின் கரையில் அமைந்துள்ளது. அங்கு நம்சுவாமிகள் சாந்தியாசிரமம் என்னும் பெயருடன் தவக்குடில் ஒன்று அமைத்து அதில் அமர்ந்து தவம்புரியலானார். அவ்வூரார் வெகு காலமாக ஒருவரையொருவர் பகைத்து இருகட்சிகளாகப் பிரிந்து நின்றனர். சுவாமிகள் அங்குசென்று தங்கியபின் அவர்கள் தங்கள் பகைமைகளை மறந்து இருசாராரும் சுவாமிகளிடம் வந்து மெய்யறிவுரைகளைக் கேட்கலாயினர். அவர்களுடைய பகைமை மறைந்தது. சிலர் சுவாமிகளுடைய ஆசிரமத்திற்கு நிலம் எழுதிவைக்கிறோம் என்று சுவாமிகளிடங் கூறினர். அடிகளார் அவ்வாறு எழுதிவைத்தல் வேண்டாம் என்று மறுத்துவிட்டனர்.

## அடிகளாருடைய தன்மை

சுவாமிகள் தமக்கு எவ்வித நோய்வரினும் மருந்து முதலியவைகளைப் பயன்படுத்துவதில்லை. மாடு முதலிய வாயில்லா உயிர்களால் இழுக்கப்பெறும் வண்டிகளில் ஏறுவதில்லை. எல்லா உயிர்களிடத்தினும் அருளுடையவராக விளங்கினர். எப்பொழுதுந் தூய்மையுடன் இருந்தார். பிறருடைய குறையைப்பற்றி யாரிடமும் பேசுவதில்லை. பிறர் தம்மிடம்வந்து பிறர் குறையைப்பற்றிப் பேசத்தொடங்கினும் இடங்கொடுப்பதில்லை. வருகிறவர்களிடம் மெய்யறிவுரைகளையே பேசுவார். அவர்கள் அவ்வுரைகளைக்கேட்டு நல்லபயனை அடைவார்கள். சுவாமிகளிடங் திருநீறு பெற்றவர்கட்கு மனக்குறைகள்நீங்கி நலமுண்டாயின.

## வடலூர் செல்ல மறுத்தமை

சுவாமிகள் காரியானூரில் இருக்கும்போது முன்னாள் முதலமைச்சர் ஓமந்தூர் ரெட்டியார் காரியானூருக்குவந்து சுவாமிகளைக் கண்டார். தாம்வடலூரிற் கட்டியுள்ள குருகுலத்திற்குவந்து அங்கு அமைந்துள்ள தியானமண்டபத்தில் தங்குமாறு வேண்டிக்கொண்டார். அதற்குச் சுவாமிகள், “அங்குதான் சுத்தாநந்த பாரதியார் முதலிய கல்வியிற்சிறந்த பெரியோர்கள் இருக்கிறார்களே அவர்களைக்கொண்டு எல்லாக்காரியங்களையும் நடத்திக்கொள்ளலாமே” என்று கூறியருளினர். அதற்கு ரெட்டியார், “பாட்டியற்ற ஆள் இருக்கிறது. சொற்பொழிவு செய்ய ஆள் இருக்கிறது. மற்றும் ஆரவாரமான காரியங்கள் செய்வதற்கும் ஆள்கள் இருக்கின்றன. ஆனால் நூலிற் கூறிவாறு ஒழுகலாற்றினைப் பின்பற்றி நடப்பவர்கள் இல்லை. கற்றுங் கொழுகும் பெரியார் ஒருவர் இருந்தால் இடம் மிகுந்த சிறப்பையடையும். இதற்குச் சுவாமிகளே சிறப்புடையவர்கள் என்று எண்ணிவந்தேன். ஆகவே சுவாமிகள்

மறுக்காமல் எழுந்தருளவேண்டும் என்று வேண்டிக் கொண்டார். சுவாமிகள் தமக்கு நோய் இருப்பதாகக் கூறியும் ரெட்டியார் வற்புறுத்தினர். ஆனல் சுவாமிகள் அங்குவர வியலாதென மறுத்துவிட்டனர்.

## சொற்போரிட்டவருக்குத் துன்பம்

சுவாமிகள் காரியானூர் ஆசிரமத்தில் எழுந்தருளியிருக்கும்போது சித்தாசிரமத்தைச் சேர்ந்த துறவியொருவர் சுவாமிகளிடம்வந்து சொற்போரிடத் தொடங்கினர். "திருநீற்றினை எதற்காகப் பூசுதல் வேண்டும்? உருத்திராக்கம் என்னும் சிவகண் மணியை ஏன் அணிதல் வேண்டும்?'' என்பன முதலிய கேள்விகளைக் கேட்டார். அவர்வினவிய வினக்கட்கு சுவாமிகள் நூல் மேற்கோள்களோடு தகுந்த முறையில் மறுமொழி கூறியருளினர். அவ்வன்பர் சுவாமிகள் கூறியதைக்கேட்டு மனநிறைவை யடையவில்லை. விதண்டாவாதத்தில் இறங்கி அளவுமீறிக் கேள்விகள் கேட்டார். சுவாமிகள் அவருடைய முரட்டுத்தனமான போக்கைக் கண்டு மறுமொழிகூருமல் இருந்துவிட்டனர். விதண்டாவாதக்காரர் தாம் சொற்போரில் வெற்றி பெற்றுவிட்டதாக எண்ணி மகிழ்ந்து சென்றனர். அவ்வன்பருக்கு இரண்டொரு நாட்களில் கடுமையான காய்ச்சல் வந்துவிட்டது. ஒரு திங்கள்வரை அவர் படுத்த படுக்கையாகக் கிடந்தார். மிகுந்த பொருட் செலவு செய்தும் நோய் குணமடையவில்லை. மிகு தொல்லையின்மேல் நோயில் இருந்து விடுபட்டார். பிறகு அவர் சாந்தி ஆசிரமத்திற்குவந்து சுவாமிகள் திருமுன்பு எண்வகை உறுப்புக்களும் நிலத்தில் தோயுமாறு விழுந்து பணிந்தார். பணிந்தபடியே கிடந்து, 'பெரியீர்! தங்களுடைய பெருமையை உணர்ந்துகொள்ளாமல் அளவுக்குமீறி நான் உரையாடிவிட்டேன். அவ்வாறு உரையாடியதன் பலனையும் நுகர்ந்தேன். சுவாமிகள்

தங்களுடைய வாக்கால் "மன்னித்தேன்" என்று திருவாய்மலர்ந்தருளித் திருநீறு கொடுத்தால்தான் கடைத்தேறுவேன்' என்று கூறினர். சுவாமிகள், அன்பர்வந்து உரையாடிச்சென்ற நிகழ்ச்சியை "நன்றல்லதன்றே மறப்பதுநன்று" என்னுந் தமிழ்மறைக்கேற்ப அன்றே மறந்து விட்டபடியால் அவ்வன்பர் கூறியது சுவாமிகட்கு விளங்கவில்லை. பிறகு நினைவு படுத்திய பொழுதுதான் தெரிந்தது. சுவாமிகள் அருள் கூர்ந்து திருநீறளித்தனர். அவ்வன்பர் எழுந்துவாங்கி யணிந்து வலம்வந்து பணிந்து விடைபெற்றுச் சென்றனர். சித்தாசிரமத்தைச் சேர்ந்தவர்கள் சிவசின்னங்களை அணியமாட்டார்கள். பிராணயாமம் ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டவர்கள். இந்நிகழ்ச்சியை உணர்ந்தவர்கள் சுவாமிகளிடம் ஒன்றுரைத்தெறலும் உவந்தாரை யாக்கலுமாகிய ஆற்றல் அமைந்துள்ள தென்று அறிந்து கொண்டனர்.

## எதிர்கால உணர்ச்சி

சுவாமிகளிடம் எதிர்கால உணர்ச்சி மகுதியாக அமைந்திருந்தது. ஒருநாள் ஆசிரமத்தில் உணவிடுந் திருப்பணி நடைபெற்றது. சாப்பாட்டிற்குப் பதினைந்து இலைகள் போடப்பட்டன. சுவாமிகள் மேலும் இரண்டு இலைகள் போடுமாறு கட்டளையிட்டனர். அவ்வாறே இலைகள் போடப்பட்டன. திருவடிப்பூசை முதலியன நிகழ்ந்தபின் எல்லோரும் உண்ணத்தொடங்கினர். அப்பொழுது எதிர்பாராதவாறு இரண்டு அன்பர்கள் வந்து சேர்ந்தனர். புதிதாகவந்த அவர்களை அதிகப்படியாகப் போடப்பட்ட இலைகளில் அமர்ந்து உண்ணுமாறு சுவாமிகள் பணித்தனர். இந்நிகழ்ச்சி அங்கிருந்த அன்பர்கட்கு மிகுந்த வியப்பையளித்தது. சுவாமிகள் நோயுற்றிருந்தபொழுது ஒருநாள் நாற்காலி யொன்றைக் கொண்டுவந்து பக்கத்திலே போடுமாறு

கூறினர். அன்பர்களும் அவ்வாறே செய்தனர். நாற் காலி போடப்பட்ட சிறிதுநேரத்திற்கெல்லாம் பெத்த நாயக்கன்பாளையம் தவத்திரு பொன்னம்பல சுவாமி கள் என்னும்பெரியார் அவ்விடத்திற்குவந்தார். அவர் அந்நாற்காலியில் அமர்ந்து உரையாடிச் சென்றார். ஓராண்டிற் காரியானூர்ப் பயிர்த்தொழிலாளர்கள் மழையின்மையால் புன்செய்ப் பயிரை விதைத்திருந் தார்கள். இவ்வாண்டு பருவமழை பெய்யுமென்பதை முன்னரே உணர்ந்த சுவாமிகள் நன்செய்ப் பயிரை விதைக்குமாறு கட்டளையிட்டனர். பயிர்த்தொழிலா ளர்களும் அவ்வாறே செய்தனர். அவ்வாண்டு நல்ல மழை பெய்தமையால் மிகுந்த பயன் ஏற்பட்டது.

### பல புதுமைகள்

சுவாமிகளிடம் பல புதுமைகள் நிகழ்ந்தன. கை முடமாக இருந்த ஓர் அன்பர் சுவாமிகளைப் பணிந்து திருநீறுபெற்று முடம் நீங்கப்பெற்றனர். நன்றாகப் பயன்தராத பயிர்கள் சுவாமிகளிடம் திருநீறுபெற்றுச் சென்று அந்நீற்றினைப் போடப்பட்ட அளவில் நல்ல பலனை யளித்தன. பொதுவாகச் சுவாமிகளைக் கருத்தி லெண்ணித் தொடங்கப்பட்ட செயல்களெல்லாம் நற் பயனையே நல்கின.

### இயற்றிய நூல்கள்

சுவாமிகள் நன்கு செய்யுள் இயற்றும் ஆற்றல் பெற்றிருந்தனர். நன்கு நூல்களை ஆராய்ந்து பிழை களைந்து சுத்தப் பதிப்பாக்கும் தன்மையும் சுவாமி களிடம் அமைந்திருந்தது. கைவல்ய நவநீதஉரை முதலியவைகளைச் சுவாமிகள் நன்கு பார்வையிட்டு அச்சுக்குக் கொடுத்தனர். திருக்களர் வீரசேகர ஞான தேசிகர்மீது திருப்பள்ளியெழுச்சி, திருவெம்பாவை, புளியந்துறை விநாயகர் பதிகம், வீரமூர்க்கற்பக விநா

யகர் பதிகம், பன்னிருதோத்திரப் பாமாலே, சங்கரகுரு அட்டகம் தமிழ் மொழிபெயர்ப்பு, கந்தரநுபூதிஉரை முதலிய நூல்களேச் சுவாமிகள் இயற்றியுள்ளனர். அவ்வப்பொழுது இயற்றிய தனிப்பாடல்கள் பல.

## இறுதி

சுவாமிகள் தமது அறுபத்திரண்டாவது அகவையில், விகாரியாண்டு மாசித்திங்கள் (1960) பதிஞேராம் நாள் வீடுபேற்றை யடைந்தார்.

## இரங்கற்பா

சுவாமிகள்மீது பல அன்பர்கள் இரங்கற்பாப் பாடினர். அவற்றுள், சென்னேயில் இருந்த ஞாஞனந்த மணவாள சுவாமிகளின் மாணவரும் உண்மைத் துறவியும், தமிழ்நாட்டுத் துறவிகள் சங்கத் தலேவரும், பல நூல்களின் ஆசிரியரும் 'துறவி' என்னும் இதழின் ஆசிரியரும், அகத்திய குருகுல அமைப்பாளரும் ஆகிய சுவாமி அருணகிரிநாதர் அவர்களின் பாடல்களே அடியிற்காண்க.

நேரிசை வெண்பா

சாந்தம் பொறுமை சமதமுதற் சாதனங்கள்
வாய்ந்தகுணக் குன்ருகும் மாதவனே !—ஏய்ந்தசிவ
ஞான மணியே நடேசகுரு தேசிகனே !
வானபதம் பெற்ருயோ வந்து. (1)

மாணவர்க ளெல்லாம் வணங்கிநிற்க நாள்தோறும்
ஞானநூற் பாடம் நவின்றருளும்—மாண்புடைய
செம்மல் நடேச சிவகுருவே ! சின்மயனே !
அம்மவுனேக் காண்பதென்ருே யாம். (2)

அண்ணு மலையில் அடியார்கள் நாள்தோறும்
தண்ணு ரமுதுண்ணும் நம்மடத்தில்—நண்ணு
மடாதி பதியாய் வயங்கிய மெய்ஞ் ஞான
நடேச குருவே நம. (3)

தூயதமிழ் நாட்டுத் துறவிகள்சங் கத்திலே
ஏய துணைத்தலைவ ராயிருந்தாய்—தாயகத்தில்
பன்னிரண்டு மாநாடு பாங்காய் நடத்துதற்கு
என்னிருகண் போலிருந்தா யே. (4)

காரியா னூரில் கவின்சாந்தி ஆசிரமம்
சீராகக் கட்டுவித்தார் சீடரெல்லாம்—ஊரார்கள்
வந்து வணங்க வரந்தருநன் மாதவனே
அந்தோ மறைந்துவிட்டா யா. (5)

கோவிலூர் ஆதீன கோவாம் குருமகா
தேவரின் சீட சிகாமணியே—நாவினுல்
ஞான உபதேசம் நாங்களுய்யச் செய்துவந்தாய்
ஏனே மறைந்தாய் இசை. (6)

அஞ்ஞானக் காட்டை அழிக்கின்ற அக்கினியாம்
மெய்ஞ்ஞான பானுவாய் வீற்றிருந்து—எஞ்ஞான்றும்
ஞானஒளி வீசும் நடேசகுரு மாமணிநீ
போனவிடம் எங்கே புகல். (7)

வேண்டும்போ தெல்லாம் வெளிப்பட்டு நின்னடியார்
காண்டற் கெளிதாகக் காட்சிதந்து—ஆண்டருள்வாய்
கற்பகமே ஞானக் கனியாம் நடேசகுரு
தற்பரனே நின்ருள் சரண். (8)

— (0) —

உ

சிவமயம்

# 2. தாந்தோன்றீசுவரர் துதி

[இது ஸ்ரீ நடேச ஞானதேசிக சுவாமிகள் அவர்கள் இயற்றியது.]

அறுசீராசிரிய விருத்தம்

மறையாதி கலைவிதியின் மலைமகளை
மணந்தொன்றாய் மருவி நின்றும்
பொறையாதி உயர்குணத்துச் சனகாதி
முனிவர்க்குப் போகம் நீத்துக்
குறையாத வியமாதி யோகாங்க
மெய்ஞ்ஞானக் குருவாம் ஆதி
துறையாதி தாந்தோன்றி யீசரிரு
தாட்கமலம் தொழுதல் செய்வாம். (1)

கலி விருத்தம்

பத்தர்போற் றுஞ்சீர்ப் பழமலைக்கு மேற்றிசையில்
மெத்தவுஞ்செந் நெல்விளையும் வெள்ளாற்றுத் தென்கரைமே
வத்தரே விடருள்வீர் அடியேற்கு மெய்யுணர்வால்
தத்துவரே ஆதிதுறை தாந்தோன்றி யீசுரரே. (2)

நிலையாமை கண்டுடலம் நின்மலராய் மெய்யுணர்வால்
வலையாய பந்தமற மாற்றியிடர் ஒன்றுமிலா
நிலைமேய முத்தரொடு நெடிதுறைய எனைச் செய்வீர்
தலையாய ஆதிதுறை தாந்தோன்றி ஈசுரரே. (3)

பலமேவு புலியூரில் பதஞ்சலிக்குஞ் சுரர்நரர்க்கும்
சலமேவு மனங்குவியச் சன்மசரா மரணவிடர்
நலமேவ ஆனந்த நடனதரி சனந்தந்தீர்
தலமேவும் ஆதிதுறை தாந்தோன்றி ஈசுரரே. (4)

கல்லாலின் கீழிருந்து கலைவல்லார் நால்வருக்கும்
எல்லாதி ஒலிக்கோலியாய் இன்பரம தத்துவத்தைச்
சொல்லாலே சொல்லாமல் சும்மா இருந்துரைத்தீர்
சல்லாப ஆதிதுறை தாந்தோன்றி ஈசுரரே. (5)

ஆதிதுறை தாந்தோன்றி அண்ணல்மணி கண்டரைநற்
சோதிமதி கங்கையணி தூயஅரு ணசலரைப்
பாதிதம தாகமப் பார்வதியார் மேவிறையை
வாதிகளுக் கெட்டா மணிமன்ற வாணர்தமை. (6)

ஓதிமலர் தூவிநினைந் துள்ளுருகு மெய்யடியார்
நீதியாம் நெஞ்சத்து நீடுறைமுக் கண்ணரையாம்
பேதியா தெப்பொழுதும் பேணிஉபா சிக்கின்மறை
ஆதிபுகல் அச்சிவமே ஆவோங்காண் விடதுவே. (7)

---

உ

சிவமயம்

ஆதிதுறை என்னுங் காரியானூர்

# ஸ்ரீ நடேச ஞான தேசிகர் தோத்திரத் திரட்டு

## 3. பஞ்சமூர்த்திகள் துதி

[கோவிலூர் ஸ்ரீலஸ்ரீ மகாதேவஞான தேசிக சுவாமிகள் மாணவர்களுள் ஒருவரும் மதுரை ஸ்ரீ மீனாட்சியம்மையார் தோத்திரப் பாமாலை ஆசிரியருமாகிய, திருமிகு சோமசுந்தர ஐயா அவர்கள் இயற்றியது.]

பதினான்கு சீராசிரிய விருத்தம்

கஞ்சமலர் வாவிவயல் மஞ்சுதவழ் சோலைசெறி
காரியா னூரி னருபால்
கந்தமுறு மாரமகில் சிந்துரக் கோடுமணி
கரையினெறி திரைமு ழங்கி
விஞ்சமுத வாரியென நீரம்வரு வெள்ளாற்று
மேதகு முதற்று றைமிசை
மிவிர்சினக ரந்தங்கி யொளிர்குஞ்ச ரானன
விநாயக முதற்க டவுளைச்
செஞ்சரவ ணப்பொய்கை வந்தகுக னைப்பெரிய
தேவர்தந் தேவ னென்னும்
சிவமான தாந்தோன்றி அப்பனைத் தேங்கருணை
செய்பெரிய நாய கிமறைப்
பஞ்சர மிருந்துவளர் பைங்கிளியை அன்பர்தம்
பவரோகம் நீக்க வந்த
பரமசஞ் சீவியை நடேசகுரு மூர்த்தியைப்
பரவிநா ளும்ப ணிகுவாம்.

# 4. நடேச ஞான தேசிக சுவாமிகள் தோத்திரம்

[ஸ்ரீ ம. கோவிந்த சுவாமிகள் அவர்கள் இயற்றியது]

காரியா னூரினில் கண்கண்ட தெய்வமாய்க்
கடையனேன் றனை யழைத்துக்
கருதரிய வாக்கிய மளித்திவ் விடத்தினைக்
காத்திரு வெனவ மைத்தும்
மாரிபோல் யாரிடத் துங்கருணை மழையினை
மாருது பொழிந் திருந்தும்
மருவியக முகமாகச் சந்ததம் வாழ்ந்து நல்
மாதவ வொழுக்கத் தினில்
வாரிபோ லளவிட்டு அறியவொண் ணுதபடி
மதித்திட வீற்றி ருந்தும்
மகிழ்வுடன் சுருதியின் சாரநல் லுரையினை
வருபவர்க் கெடுத்து ரைத்தும்
நாரியர் நசைதீய நஞ்சென வொழித்து மிந்
நாடறிய வீற்றிருந்த
நவிலரிய புகழுடைய நடேசமுனி திருவடிகள்
நந்தலைக் கணிவா மரோ. (1)

[வேறு]

ஒழுக்கம் நிறைந்த சற்குருவெம்
உயர்மா தேவன் கழலடைந்து
வழுக்கில் துறவு நெறிதன்னின்
மருவி மகிமை மிகப்பெற்றுக்

கொழிக்குந் தரளங் கரைபுரளுங்
குளிர்ந்த அலைகூர் வெள்ளாற்றின்
செழிக்குங் கரைவாழ் நடேசமுனி
சீரா ரடிகள் நந்தலைக்கே. (2)

இனிய மொழியே திருவுருக்கொண்
டிருந்த மாதே வன்னடியில்
கனிவு மிகுந்து சரணடைந்து
கலைக ளெல்லாங் கற்றுனைய்த்
தனிமை பிரமந் தனைநாடிச்
சாந்த நிலையை யடைந்திருக்கும்
தனிநற் குருவாம் நடேசமுனி
தண்ணா ரடிகள் நத்தலைக்கே. (3)

கிடைத்தற் கரிய நின்னடைவு
கிடைத்துங் கொடிய பாவியனேன்
துடைத்து நசையைச் சொரூபமதாய்த்
துலங்கும் நெறிநின் பால்வினவி
அடைத்துப் பிறவி வழிதனை நான்
அதுவா யிருக்க அறிந்திலனே
உடைத்திவ் வகந்தைக் கிரந்திதனை
உயர்ந்தாய் நடேச குருமூர்த்தி. (4)

தனத்தைப் பலர்பால் வாங்கிவந்து
சமாதிக் கோவில் அமைத்திடவே
மனத்து நினைத்து உத்தரவு
வழங்க வேண்டும் எனவேண்ட
அநித்தப் பொருளை யென்பொருட்டால்
அணுவுங் கேளே லென்றுரைத்தாய்
சனித்த பிறவி தனைமாய்த்த
சாந்த நடேச குருமூர்த்தி. (5)

நினது அடியை அடைந் தன்று
நிவிர்த்தி தனையே விரும்பினனுய்
எனது பணியை யேற்றருளென்
றிரந்து வேண்டத்திருவாயால்
இனிதவ்வாறே நம்மிடத்தில்
இருவென் றருளிச் செய்தனையே
நனிசொற் பலித முடையதிரு
நடேச குருநின் னடிபோற்றி. (6)

உன்து மொழியைச் சிரமேற் கொண்
டொழுகு மெனது மனமாயை
கனவு போன்ற உலகவசை
கருது பெருமை களைவிரும்பி
அனலி யெனவே விட்சேபம்
அடைதல் நன்றே உரைத்தருள்மெய்
நனவு எனுநன் ஞானமருள்
நடேச குருநின் னடிபோற்றி. (7)

நின்பொன் மொழியை யனுசரித்தோர்
நினைத்த சித்தி யடைந்தார்துர்க்
கன்மத் துழல்வோர் நின்னுரையைக்
கடந்து துன்ப மெய்தினரே
இன்ப முத்தி யெனக்கருளி
யிடரை யகற்றி யாட்கொள்வாய்
நன்பு நிறைந்த கருணையுள
நடேச குருநின் னடிபோற்றி. (8)

[வேறு]

வேண்டிய தவித்தன் பர்க்கு
வெருவிடா தாண்டா யென்றும்

கூண்டெனத் தேகம் வேறு
கூடத்த னேநா னென்று
தூண்டிடும் சொருப நாட்டம்
தொடர்ந்துநின் றுயர்நி ராசை
பூண்டிடும் நடேச மூர்த்தி
பொன்னடி வணங்கு வேனே. (9)

கறைமிடற் றண்ண லைப்போல்
காரியா னூரில் வந்து
குறைதனை நீக்கும் மேலாம்
குணப்பெருங் கடலே சர்வ
மறைகளும் ஓது முன்றன்
மகிமையை யென்சொல் வேன்யான்
நறைதனை நீக்கி யாள்வாய்
நடேசமா குருவே போற்றி. (10)

அனந்தநன் மகிமை காட்டும்
ஆண்டவ அடிய னேனுக்
கினந்தரும் நிராசை சேர்ந்த
இகபர வைரா கந்தான்
மனந்தனி லுதிக்கும் வண்ணம்
வரந்தனை யளிப்ப தென்றோ
சினந்தவிர் நடேச மூர்த்தி
திருவடி போற்றி போற்றி. (11)

வேறு

திருவளர் வசிட்டநதி தென்பாரி சத்தினில்
தெங்குமா கமுகு புன்னை
திவ்யமாம் கதலியும் இலுப்பையும் புன்கொடு
சீர்வில்வ அரசுமுதலாம்

தருவளர் வனத்தினிடை சாந்தியாச் சிரமத்தில்
சமாதிகொண் டிலகு மெங்கள்
தந்தையே அந்தமில் இன்பமே போற்றிடும்
தங்கமே யானி துவரை
மருவளர் பிறவியில் மயங்கியே போகத்தில்
மாயா அவாவி னுலே
மனதென்ற வொருதுட்ட வன்பேய் பிடித்திட்டு
வதைக்கின்ற வதனி னுல்புன்
நரகவலி யெனும்பெரிய துன்பமது வாட்டுமே
நானேது மறிகி லேனே
நவிலரிய புகழுடைய நடேசகுரு நாதனே
நாயினேற் கருளு வாயே. (12)

சூரிய னிடத்திலே அந்தகா ரம்வந்து
சூழவிய லாத ததனில்
சோதியா மென்னிடம் அஞ்ஞானம் வந்திடச்
சொன்னுாய மில்லை யென்று
வீரிய அருச்சுனன் கேட்டதற் குத்தரம்
விமலபக வான்க ருணையால்
விடாதந்த ஞானந்தான் வந்திடில் அஞ்ஞானம்
விழ்ந்துபின் சிறிது மில்லை
ஆரிய ஆனந்த சாகரம் சந்ததம்
அனுபவி என்று ரைத்தார்
அடியனேன் பலதரம் சிந்தித்துப் பார்க்கினும்
அனுபவம் வரவில் லையே
நாரியர் மயக்கத்தை நீக்கிநல வுணர்வுற்று
நம்பினேர் துயரொ ழித்தாய்
நவிலரிய புகழுடைய நடேசகுரு நாதனே
நாயினேற் கருளு வாயே. (13)

சூரனின் உருவமும் யானையின் வடிவமும்
பூதத்தின் பெரிய வுருவும்
சுருள்கயிறு மூங்கிலும் காகிதப் பசைகளும்
சுற்றிக்கட் டியகற் பிதம்
வீரமுள புருடனதைத் தூக்கிச் சுமந்துவிளை
யாடுவதைக் கண்ட னமதின்
மித்தையிவ் வுடலையும் அநுசூத மாயாத்மன்
விளையாட்ட தாயெ டுத்து
ஆரமணி வத்திரம் புனைந்துநான் மனிதனென
அகங்கரிக் கின்ற வதனல்
அஞ்ஞான மதனினல் பிறப்பிறப் பாதியை
அடைந்துசுழல் கின்றே னந்தோ
நாரண சிவமிரண் டும்மபே தம்மென
நாளும்பூ சித்து வந்தாய்
நவிலரிய புகழுடைய நடேசகுரு நாதனே
நாயினேற் கருளு வாயே. (14)

மயிரிரத் தந்தோலு மிறைச்சியு நரம்புகள்
மச்சையு மெலும்பு களுமே
வடிவமாந் தேகத்தில் நானெனும் அகந்தையும்
மாயையால் வந்த டுத்த
செயிருற்ற புத்ராதி பொருள்களில் எனதென்னும்
சீரற்ற மமதை யதுவும்
சித்தத்தை விட்டகல எக்காலம் வாய்க்குமோ
சேயனேன் சிறிது மறியேன்
துயருற்ற மக்களைக் காப்பதற் காகவே
தொல்லோக பால கர்களே
தொடர்யுகங் கள்தோறும் அவதரிக் கின்றனரென்
சொல்சாத்தி ரப்படி யதாய்

நயவிந்த யுகத்திலும் ஞானிகள் தோன்றினர்
நன்மைதர நீயும் வந்தாய்
நவிலரிய புகழுடைய நடேசகுரு நாதனே
நாயினேற் கருளு வாயே. (15)

இடையருப் பேரன்பு கொண்டதிரு நாவரசர்
எழில்பக்தி யின்சே வையும்
எங்கெங்கு பார்த்தாலும் இறைவனுரு வேகாணும்
இயல்ஞான திருஷ்டி தனையும்
நடையிலா துனதுதிரு வடிகளில் தோத்திரம்
சாத்திடும் அமிர்த வாக்கும்
சாந்தமும் பிறருடைய குறைகளைப் பேசாத
தகைமையாம் மவுன மதுவும்
கொடையரு ஈகையும் கிஞ்சித்தும் தவிராத
குறிக்கோள் விசாரத் திலே
குறுகவும் நின்தொண்டர் குழுவிலே கூடியுனைக்
கொண்டாடும் பெரும்பேற் றையும்
நடையருப் பெருந்துறவு வாழ்க்கையும் எந்நாளும்
நழுவாத தியானத் தையும்
நவிலரிய புகழுடைய நடேசகுரு நாதனே
நாயினேற் கருளு வாயே. (16)

ஆண்டதொரு அரசிலும் போகத்து மாசைதனை
யற்றுவன வகம தனிலே
அரியபர குருவினுப தேசத்தின் பொருளினை
அடைவதாய்க் கேட்டு ணர்ந்து
மாண்டதொரு திடஞானம் பெற்றுநக ரினிலேகி
வருபிச்சை வாங்கி யுண்டு
மனமகிழ வேகாந்த மாயொரு விடத்திலே
வழுவிலா நிட்டை செய்து

பூண்டதொரு துறவறம் குறைவின்றி வாழ்ந்திட்ட
பூஜ்யமா ராஜ னைப்போல்
பொலிவான ஐஸ்வர்ய சுகத்தினைத் துறந்துதண்
புனிதவாற் றின்க ரையினில்
நாண்டவா தரிவையர்கள் கற்புமிக ஓங்கிடும்
நற்காரி யானூரில் வாழ்
நவிலரிய புகழுடைய நடேசகுரு நாதனே
நாயினேற் கருளு வாயே. (17)

சந்ததமுங் கருமமது செய்யவே வேண்டுமெனச்
சாற்றுகின் றூர்கள் சிலபேர்
சமயவிதி உபாசனை செய்தலவ சியமென்று
சாற்றுகின் றூர்கள் சிலபேர்
பிந்தியுள சாதனம் பயிலவே வேண்டுமெனப்
பேசுகின் றூர்கள் சிலபேர்
பிராணனை யடக்கியே யோகத்தி ருந்திடுதல்
பெரியதவ மென்பர் சிலபேர்
சந்திசம யங்களில் தியானத் திருந்திடுதல்
சாலநன் றென்பர் சிலபேர்
சபமதனை மிகுதியாச் செய்தல்நன் றென்பர்சிலர்
சாமியே! எதுநன் றுகாண்
நந்தலறு முனிவர்தில கமதென விளங்கிடும்
ஞானத்தின் மோன வடிவே
நவிலரிய புகழுடைய நடேசகுரு நாதனே
நாயினேற் கருளு வாயே. (18)

சிவனன்றி ஒரணுவுஞ் சிறிதுமசை யாதென்ற
திவ்யமொழி யொன்று கண்டால்
தீரரெவர் வீரரெவர் சித்தரெவர் பித்தரெவர்
சீறிமார் தட்டு மவரார்

புவனமேவ ருடையது பொறையற் றதட்டியே
புண்பட வுரைப்ப ரவரார்
பூதமவை கிரமமாய் நடத்துகின் றவரேவர்
பொருந்துசுக துக்க மதனை
எவர்தருவர் அவரன்றி யிறையளவு மின்றென
இவிசைத்தவுனை யென்று மறவேன்
இன்பமே துன்பங்கள் நீக்கிமக் களையாண்ட
ஈசனே மாசி லாத
நவமதாம் சாந்தியாச் சிரமத்தில் வாழ்கின்ற
நம்பனே சேட னும்
நவிலரிய புகழுடைய நடேசகுரு நாதனே
நாயினேற் கருளு வாயே. (19)

சங்கரரின் பாடியம் சாத்திரம் கற்றிடச்
சமர்த்துவர லெந்த நாளோ
சாதுக்கள் தன்மையை யுணர்ந்துநல் விராகத்தைச்
சாருதலு மெந்த நாளோ
அங்குருவின் வாக்கிய மறிந்ததை யனுட்டிக்கும்
ஆர்வம்வர லெந்த நாளோ
அகிலஉல கத்தையும் சுற்றிவரு மிம்மனம்
அடங்கிடுத லெந்த நாளோ
பங்கமற உன்றனது பண்பினை யறிந்துன்னைப்
பரவுதலு மெந்த நாளோ
பலபேரின் நிந்தைகள் சகித்துன்னை மறவாத
பாங்குவர லெந்த நாளோ
நங்குருவின் மரபோங்க வந்தவ தரித்திட்டு
ஞானவடி வாய்வி ளங்கும்
நவிலரிய புகழுடைய நடேசகுரு நாதனே
நாயினேற் கருளு வாயே. (20)

ஊனதனை ஓம்பாது உயர்நிலையை நாடியே
ஓயாவி சாரத் தினல்
உருகியுகு கண்ணீரும் கம்பலையு மாகியே
உற்றனை யுனைய டுத்தோர்
தானுறுமுத் துன்பங்கள் நீங்கிவேண் டியவற்றைத்
தவிரா தடைந்த னரதும்
சகலரும் அறிவார்கள் தமியனு மறிந்துனது
சரணடைந் தேனெ னினுமிம்
மானிடச் சென்மத்தை யடைந்தன னுயினும்
மனமிருகம் போரா டியே
மயக்கியிங் கிழுத்தடித் தலைத்துவெகு பக்கத்தில்
வதைக்கின்ற தென்செய் குவேன்
நானெனு மகந்தையை நசிப்பித்து ஞானத்தை
நனிபெற்று விற்றி ருந்த
நவிலரிய புகழுடைய நடேசகுரு நாதனே
நாயினேற் கருளு வாயே (21)

சமரசம தாகவே சிவபக்தி குருபக்தி
சார்ந்த அரிபக்தி யதனுல்
தசரத ராமனின் சரிதமது சொல்லியே
சாலகண் ணீரு குத்தாய்
விமரிசைய தாகவே நாயன்மார் முதலிய
விமலரை மிகப்போற் றினை
வேதமுத லியஞான விதியனுட் டானத்தில்
மிகச்சிரத் தைவைத் தனை
அமலகுரு பரம்பரையில் ஆதரவு காட்டினை
அப்பர்முதல் நால்வர் தமது
அருட்கவியில் அன்புடையை குருபூசை விழாவினை
ஆர்வமாய் நடத்திவந் தாய்

நமதுமா தேவகுரு திருவுளப் பாங்காக
நடந்தனை யுனையொப் பவர்
நாடினுங் கிடையார்கள் நடேசகுரு நாதனே
நாயினேற் கருளு வாயே. (22)

துறவுநெறி தவருத தூயனே நாயினேன்
துன்பங்கள் பட்டுழன்று
தொல்ஆதி சங்கரரின் மரபுவழி தோன்றிய
சுகஞான மாதவர்கள் வாழ்
கறையறுநற் கோவிலூர் மடத்தினே ழாம்பட்டம்
கண்யமா தேவ குருவின்
கழலிணை யடைந்தின்ப வேதாந்த சாத்திரக்
கருத்துசிறி தறிந்தி ருந்தும்
பிறவியறு திடஞான மென்றுவரு மோவென்று
பித்தா யுழன்று மிந்தப்
பேயனே னுன்றனது திருவருட் பிரசாதம்
பெற்றிட விழைகின் றனன்
இறைவருள் அவதார மூர்த்தியே என்றனை
யிர்த்துனக் காளாக் குவாய்
இன்பவடி வாய்நிற்கும் நடேசகுரு நாதனே
எளியனேற் கருளு வாயே. (23)

இளமையில் திருவணு மலைசென்று இறைவர்க்கு
இனியமலர் புனைந்தேத் தினை
இசைவிளி சாளிய மடத்தினதி பதியான
எழில்மகா தேவ குருவின்
வளமைபெறு கழலிணை யடைந்துபணி செய்ததால்
மகிழ்ந்து திடஞான மதனை
வசையற அளித்துன்னை மடாதிபதி யாக்கிய
மாநன்றி பாராட் டினுய்

எளியனே னுனையடைந் துஞ்சிறிது விசுவாசம்
இன்றியே வுழல்கின் றனன்
இனியேனும் நல்நெறியில் செல்வனே இழிவினேன்
இசைத்திட வேண்டு மெந்தாய்
களவற்ற உடையார்கள் வாழ்காரி யானூரில்
களிபெறு வசிட்ட நதியின்
கரையமர் நடேசகுரு நாதனே என்றனைக்
காப்பாற்றி யருளு வாயே. (24)

சிவப்பிர காசகுரு முதலோரு முன்றனது
சீர்த்தியை வழுத்து கின்றார்
திருச்சிமா வட்டத்து மகாசன முன்னையே
தெய்வமாய் நம்பி யுள்ளார்
அவப்பகை யால்சண்டை ஆடம் பரக்காரர்
அடங்கியே அமைதி யுற்றார்
அன்னபூ ரணியென்ன அடியவர்க் காகாரம்
அளிப்பதற் கறிந்து கொண்டார்
பவப்பகை யறுக்கின்ற திருநீறு அணிகின்ற
பண்புமிக வோங்கி யுளதே
பரமனே வுன்னுடைய சந்நிதா னத்தினது
பான்மையின் பெருமை யென்னே
தவப்பகைகள் சேராத வசிட்டநதி தீரத்தில்
சாந்திஆச் சிரம மேவு
தண்ணளிநற் கருணையுள நடேசகுரு நாதனே
தமியனேற் கருளு வாயே. (25)

ஆண்டவர் உளரோருவர் அஞ்சவேண் டாமென்றிங்
கருளியெனை அருகி லேயே
ஆதரவு காட்டியே வைத்திருந் தாயுன்னை
அன்னையும் பிதாவு மாக

வேண்டிநன் மேனிக்குப் பணிபுரிந் தேனின்று
விதிவசமென் செய்கு வேன்
வினைவழிய தாய்மனது ஒருவழியில் நில்லாமல்
வேதனைக் குள்ளாகியே
தாண்டியுழல் குரங்கெனச் சலிக்கின்ற திதனையும்
தண்டிப்பதுன்க டன்காண்
தவமதனைப் புரிதலே தலையாய கடனெனத்
தகுதியுடன் ஒழுகி நின்ருய்
தூண்டுசுட ரனையநின் தூயஆ சாரத்தின்
சுகவடிவ மென்று காண்பேன்
சொல்லருநற் குணமுள நடேசமுனி யேயெங்கள்
சோதிசற் குருநா தனே. (26)

உடலினை வெறுக்கின்ற உட்டுறவு தன்னினுல்
உயர்பத்கு ஹரியென் னலாம்
உதாரகுண மதனினுற் கர்னனென லாம்பாடம்
உபதேசிக் கும்மு றையிலே
மடமையறு வசிட்டரே யென்னலாம் சாந்தத்தில்
வளர்தர்ம ராச ரெனலாம்
மாசறு மிறைவனது பக்தியில் உருகிடும்
வாதவூ ரடிக ளெனலாம்
துடியிடை மாதரை வெறுக்கின்ற விரக்தியில்
சுகருக்குச் சமமேன் னலாம்
சோர்விலாச் சிரத்தையில் கட்வாங்க னென்னலாம்
சொல்சிவ கருணை தனிலே
வடசிதம் பரமென்னும் வடலூரின் வள்ளலார்
மறுமையவ தார மெனலாம்
மகிமைபெறு நடேசகுரு பெருமையினை அறிஞரும்
வகுத்திடல் முடியா தரோ. (27)

சகுணமூர்த் தியினிடம் ஒருகண மனதினைச்
சமர்ப்பிக்க முடிய வில்லை
சாரரிய நிர்க்குண வஸ்துவினில் இமையளவும்
சார்ந்திட வியலவில்லை
தகுதியுடை நினதுதிரு பணிவிடை செய்திடச்
சகித்தல்குணஞ் சிறிது மில்லை
சாதுசங் கத்தினில் பணிவுடன் சார்ந்திடும்
சார்ந்தகுணஞ் சிறிது மில்லை
வெகுவேக மாய்மனது பூலோக முழுதையும்
வேண்டிய படிநி னைந்து
விழலுக் கிறைத்தநீர் போலவே நாடோறும்
விழுந்துழன் றுந்திரிவ தால்
சுகஞான மென்றனக் குக்கிட்டு மோவிந்த
சோகமுள ஜென்ம மதனில்
சுத்தமுறு நடேசகுரு வேயெனைக் கைவிடேல்
சோதிஆ னந்த வடிவே. (28)

காணுதல் கேட்குதல் சுவைத்திடல் முகர்தலாம்
கவர்ச்சியுறு பரிச மதுவும்
கமனஆ கமனமும் இடுதலேற் றிடுதலும்
கசிவான வார்த்தை யதுவும்
பேணியே வுண்டதை விசர்சனம் செய்தலும்
பேசுமிந்தி யச்செயல் களாம்
பிரிவிலா சமட்டியாம் கரணத்தின் செயல்களே
பேதமாய் நானென் னலும்
சேணுறும் பொருள்களைச் சங்கற்பித்திடுதலும்
சிந்தித்தல் தரித்த லதுவும்
சேகர விஷயத்தை நிச்சயித் திடுதலும்
திகழ்பிரா ணுதிதொழிலும்

பூணுறும் தேவதைகள் நடத்தநான் சாக்ஷியென்
பொருந்துதிட நிச்ச யத்தைப்
பூரண மாகவருள் நடேசகுரு மூர்த்தியே
பூரணு னந்த வாழ்வே. (29)

நினதுதிரு வடிதீர்த்தம் கங்கையாம் நின்மேனி
நிமலவிசு வேச ரெனலாம்
நிசமான நினதுசொல் வேதமாம் நின்சேவை
நிகிலதெய்வ சேவை யெனலாம்
தினமுநின் பணிபுரிந் திடுமவர்க் குப்பிறவி
தீண்டிடா தென்று சொலலாம்
தீங்கிலா நின்கோவில் வலவரும் பக்தர்க்குத்
தீநோய்க ளணுகி டாதே
மனத்துடன் வாக்கினில் நினைத்துத் துதிப்பவர்
வறுமைபல வும்நீங் கியே
வள்ளலாய் வாழ்ந்திடுவர் தியானிக்கு மவர்களும்
மகிழ்ஞான மெய்து வார்கள்
நனவினிற் சுழுத்தியை யடைந்தனை யன்பர்க்கு
ஞானசொற் பொழிவாற்றினை
நவிலரிய புகழுடைய நடேசகுரு நாதனே
நாயினேற் கருளு வாயே. (30)

---

# 5. நடேச சிகாமணிப் பத்து

[திருவாலந்துறை உயர்திரு. சச்சிதாநந்த சுவாமிகள் அவர்கள்.]

எழுசீராசிரிய விருத்தம்

தண்புன லிழியுஞ் சுவேதநன் னதியில்
தகுந்துறை எழுவகை யவற்றுள்
மண்புக ழாதி துறையமர்ந் தருளி
வருபவர்க் கின்னருள் வழங்கக்
கண்புகு நெற்றிக் கடவுளே தம்மைக்
கரந்திவண் உற்றனர் என்ன
நண்பொடு யாரும் நாடுந டேச
ஞானதே சிகசிகா மணியே. (1)

அடர்தரு பிறவி ஆரணி யத்தில்
ஆர்துணை இன்றியே அலையும்
திடமிலி யடியேன் தடமெனு மனத்துள்
திருப்பதம் மலர்வதெந் நாளோ
விடலரும் உலக வாழ்வினை வெறுத்து
விவேகம்மேல் ஓங்கினர் உளத்தில்
நடமிடு மோன மானந டேச
ஞானதே சிகசிகா மணியே. (2)

விடமெனுங் கொடிய விடயம துழலும்
வெம்பொறி வழிச்செலும் வெய்ய
மடமுறு மனமென் வசமதில் நிலைத்துன்
மலர்ப்பதம் வழுத்துநாள் உளதோ
மடமெனும் இருளே மாயவி வேகம்
மலிந்தவர் உளத்தினில் உதித்து
நடமிடு ஞான பாநுந டேச
ஞானதே சிகசிகா மணியே. (3)

மறையறி வறிவு மற்றது கூறும்
வழிதனில் ஒழுகிடும் ஒழுக்கும்
இறையள வேனும் இன்றிய எளியேன்
இதயம்நின் பதமலர் உறுமோ ?
மறையுரை பொருளைச் சாதனம் அனைத்தும்
மன்னிய மாணவர் தமக்கு
நறையெனப் பருக நல்குந டேச
ஞானதே சிகசிகா மணியே. (4)

தந்தைதாய் முதலாம் பந்தசங் கடங்கள்
சற்றும்வி டாதஇத் தமியேன்
எந்தநாள் உனது திருவடி மலரை
எய்திஎன் உளத்துயர் களைவேன் ?
தந்தைதாய் குருதெய் வங்களும் நினது
சரணமென் றடைந்தவர் தமக்கு
நந்திடா உணர்வின் பளிக்குந டேச
ஞானதே சிகசிகா மணியே. (5)

இகபர விடய இச்சைகள் ஒழிந்த
இதயிகள் எய்தும்நின் அடியைச்
சகசுகம் அணுவுந் தவிர்ந்திடா அடியேன்
சாருவ தென்பதுந் தகுமோ ?
மகமுத லியற்ற வல்லுநர் தமக்கும்
மதிக்கரு மாண்புட னெவிரும்
நகைமுகச் சுகமெய் யாகுந டேச
ஞானதே சிகசிகா மணியே. (6)

தாயினைப் பிரிந்த சேயெனக் கதறும்
தமியனின் உளத்திவி திருந்து
நீயுணர் மாவாக் கியப்பொருள் உணர்வை
நிருமிதஞ் செய்தருள் புரிவாய்

தாயினுஞ் சாலப் பரிவுறும் நினது
தண்ணருட் கடலமு துண்ண
நாயினேன் தனக்கும் இயலுமோ நடேச
ஞானதே சிகசிகா மணியே. (7)

பந்தவேர் அறுத்துத் தந்தனிப் பதத்தைப்
பற்றினர் பண்டித ரெல்லாம்
சிந்தனை அடியேன் தேகபோ கத்தில்
சென்றிடில் உய்வனே செப்பாய் ?
மந்தரு நினது மலர்முகங் காணின்
மனமயல் ஒழிந்தருள் வழியே
நந்தருஞ் சிந்தை ஒன்றுவர் நடேச
ஞானதே சிகசிகா மணியே. (8)

எந்தநாள் உனது திருவருள் பெறுவ
தெனஎணி உளமிக இனைந்த
இந்தநா யேனுன் எலேயறும் அருவில்
இறையள வேனுமெய் துவனே ?
சிந்துமா மேகம் மாறுவேண் டாபோல்
திருவருள் புரியுநின் செயற்கு
நந்துகைம் மாறு கண்டிலன் நடேச
ஞானதே சிகசிகா மணியே. (9)

தொட்டவர் தமையுஞ் சுமக்கும் மண்போலும்
தோள்முகஞ் சிரமுத லவற்றில்
நட்டமிட் டுதைக்க முத்தமிட் டுவகை
நனிபெறும் பெற்றவர் போலும்
இட்டநின் பணியை இயற்றிலேன் எனினும்
எளியனேன் செய்பிழை யனைத்தும்
நட்டமே புரிவாய் பொறுத்தருள் நடேச
ஞானதே சிகசிகா மணியே. (10)

———

# 6. நடேசகுரு நவமணிமாலை

[உயர்திரு. சித. நாராயண சுவாமிகள், அவர்கள் அறுபத்துமூவர் மடம் திருவையாறு.]

வெண்பா

அன்னையென மாணவரை யாதரித்துத் தண்ணளியால்
தன்னையே தந்துவக்குஞ் சற்குருவாய்—மின்னுகின்ற
ஞான நடேசமுனி நற்று டொழுதுநின்றால்
மோனநிலை சேரு முனைந்து. (1)

போகாத் துயரம்போம் புக்கடையா வின்பமுறும்
ஆகாத தீமையிரு ளற்றொழியும்—மாகாதல்
கொண்டு நடேசகுரு கோமளநற் றண்மலரைக்
கண்டு வணங்கி நின்றக் கால். (2)

அண்ணு மலையா னருட்கோயி லூரகத்தான்
நண்ணுமெழிற் காரியா னற்பதியான்—அண்ணல்
நடேசமுனி தாடொழுது நன்னெஞ்சே துன்பம்
விடேசுஞ் செயலை விடு. (3)

வடமொழியுந் தென்மொழியு மாசறவே கற்றுத்
திடமுறவே சாத்திரங்க டேர்ந்த—நடேசமுனி
காரியா னூரான் கவலையெலாம் ஞானமெனு
மாரியான் மாய்ப்பான் வணங்கு. (4)

உளமாறி நிற்கு முயர்வை முகத்தால்
வளமாகக் காட்டுமலி வள்ளல்—கொளவரிய
நற்றுறவு பூண்ட நடேசகுரு சேவைகொண்டால்
வெற்றுறவு போமே விரைந்து. (5)

நேதியெனப் பொய்ப்பொருளை நீக்கிமறை மெய்ப்பொருளை
ஓதுமது நீயென் றுணர்த்தவந்த—சாதுவே
நற்றவனே துன்பிலின்பு நட்டவனே யன்பருக்
குற்றவனே காப்பாய் உவந்து. (6)

உவந்தடியே னின்பா லுற்றடியே போற்றிப்
பவந்தெறவே நின்றேன் பணிந்து—தவந்துறவு
நல்வடிவா வந்த நடேசகுரு ஆவரண
வல்வடிவங் கொள்வாய் மகிழ்ந்து. (7)

மகிழ்ந்து துறவரசா மன்னு நடேச
அகழ்ந்துமல மூன்று மழித்துத்—திகழ்ந்தெனுள
நச்சோதி ஞானமர நாட்டுகவே நிற்பணிந்தேன்
சச்சோதி யின்படையத் தான். (8)

தானுக வெங்குந் தடையறவே நின்றசிவ
ஞானுகா ரத்திருவ நற்றவனே—தேனுகுஞ்
சொல்லோய் நடேசகுரு தூயவனே துன்பழிக்க
நல்லோய் தொழுதே னனி. (9)

———



# 7. நடேசகுரு மாலை

[ஆத்தூர் உயர்திரு. திருநி. சண்முகானந்த, சுவாமிகள் அவர்கள்.]

எழுசீர் ஆசிரிய விருத்தம்

திருவளர் மார்பன் றிகழுமை பாகன்
றிருந்துநற் கலைமகள் நாவன்
உருவளர் ஞானக் கொழுந்துநின் னுருவா
யொருங்கவே யுதித்தன ருலகிற்
கருவளர் பிறவிக் கடல்கடந் தவர்வாழ்
காரியா னூர்தனில் வாழெம்
இருமல மிரிக்க வெழுந்தருள் நடேச
விருப்பொளி யின்பநா யகனே. (1)

கலைபல வுணர்ந்த கருத்தினர் வருந்திக்
கற்றதற் குற்றநற் பயனுய்
மலைவறு நினையே வழுத்திநற் றவராய்
வாழ்வரிந் நிலமதில் நாளும்
அலைபயில் அமுதக் காரியா னூரில்
அகத்திருள் இரிக்குநற் றவனுய்ச்
சிலைபயில் மனத்தேற் கருளுநன் னடேச
விருப்பொளி யின்பநா யகனே. (2)

கண்ணருங் கொடிய பாதகம் பலவுங்
கண்டிடுங் கடியனே னெனினும்
நண்ணரும் நினது நலங்கிளர் நாட்டம்
நண்ணிநல் விடுறப் புரிவாய்
பண்ணருஞ் சோலைக் காரியா னூரிற்
பரம்பொருள் வடிவமா யமர்ந்தோய்
எண்ணரும் பெரியோ ரேத்துநன் னடேச
விருப்பொளி யின்பநா யகனே. (3)

பரவுநங் கருணை பக்குவ மனத்தோர்
பாலலாற் பாதகர் தம்பால்
விரவுமோ வென்னின் விரைபொரு கங்கை
மிக்கபுன் சேற்றினும் புகுமே
கரவிலார் வதியுங் காரியா னூரிற்
கலந்தருள் கற்பகக் கொழுந்தே
இரவுதீர் புலவர்க் கிறைவனும் நடேச
விருப்பொளி யின்பநா யகனே. (4)

ஒப்பினின் புகழைக் கேட்கவென் செவிகண்
ணேங்குநின் றிருவுருக் காணத்
தப்பினின் னடிகள் சாற்றிட வாய்கை
தனித்தநின் னடிப்பணி யாற்றச்
செப்பிய முறையி லியற்றுவாய் நாளுஞ்
செந்தமிழ்க் காரியா னூர்வாழ்
திப்பிய ஞானச் செல்வநன் னடேச
விருப்பொளி யின்பநா யகனே. (5)

தலைவி கூற்று

துதிபெறு நினையான் கண்டநாள் முதலாத்
துட்டவேள் கணைக்கிலக் காகிக்
கதியிலா துழன்றேன் கண்டவர் நகைக்கக்
கண்ணருள் செய்திலாய் என்னின்
விதியிலாக் கனவில் வந்தெனை வேட்டல்
வெளிப்பட யாவர்க்கு முரைப்பேன்
யதியருட் டலைமை யெய்ந்தநன் னடேச
விருப்பொளி யின்பநா யகனே.

முத்தவெண் ணகையார் முயக்கிலே நாளும்
முய்லுவார் குழாத்தொடுங் கூடிப்

பித்தனு யுழலும் என்றனை நின்னிற்
பிரிப்பையேல் நாவலன் பொருட்டு
நத்தநேர் குழலெம் பரவைபாற் றூது
நடந்ததை யறைந்துனைப் பிரிப்பேன்
சித்தியை யிகந்த சிறந்தநன் னடேச
விருப்பொளி யின்பநா யகனே. (7)

சொல்லுநற் கலைகள் தோன்றுற மிகவுஞ்
சூழ்ந்துளா ரேனுமிங் கவர்க்கு
நல்லைநின் சொல்லை யன்றிநல் வீடு
நண்ணுமோ நலங்கிளர் திருவால்
தொல்லைநற் புகழார் காரியா னூரில்
தொழுதவர் பவப்பிணி யகற்றி
எல்லையில் துறவோர்க் கிதமருள் நடேச
விருப்பொளி யின்பநா யகனே. (8)

யாதனி னெருவ னீங்கியா னவனே
யெய்திடான் றுன்பமென் றந்நாள்
ஓதிய புலவ னெண்மொழி யோரா
துழல்கொடி யேற்கருள் வாயே
சீதநல் வயலர் காரியா னூரில்
திகழ்தரும் உபநிடப் பொருளே
ஏதமில் வழியே யிசைத்தநன் னடேச
விருப்பொளி யின்பநா யகனே. (9)

வெய்யபுன் பாச மார்க்கமத் தனையும்
விலகநின் றிருக்கழ லடைந்தேன்
ஐயவெங் காலன் வீசுவெம் பாசம்
அடைதரா திருக்கவெற் கருள்வாய்
துய்யமா ஞானக் காரியா னூரில்
தோந்தமில் சற்குணக் குன்றே

தெய்வமா தவனே யெங்குமாம் நடேச
விருப்பொளி யின்பநா யகனே. (10)

நற்றாய் இரங்கல்

ஐயநின் பவனி கண்டநாள் தொட்டே
யரியநின் றருள்மலல் வேட்டு
நைய வூருள்ளார் நாவலர் மதவேள்
நகையலர் குறைவிலா தேற்று
மையனெஞ் சினளாய்க் கண்ணினீர் பொழிவாள்
வயங்குநின் றிருவுளக் கருணை
செய்யவென் றடைவாள் திகழுநன் னடேச
விருப்பொளி யின்பநா யகனே. (11)

முற்றவ மியற்றி மும்மல மிரித்த
மோனமெய்ஞ் ஞானிய ரல்லால்
மற்றவர் கவருந் தரத்ததோ நின்றன்
மலியருள் வானமரர் கதிரை
உற்றபொன் மாடக் காரியா னூரி
லொழிவிலா நற்றவ மியற்றிச்
செற்றமோ டாசை யிகந்தநன் னடேச
விருப்பொளி யின்பநா யகனே. (12)

பற்பல ஞான நூல்படித் திடினும்
பாறுமோ பிறப்பிறப் புரையாய்
சொற்படு மாடக் காரியா னூரிற்
றுன்பிலாப் பலிநுகர்ந் துன்றன்
அற்பொடு முறுவார்க் கிறப்பொடு பிறப்பும்
அகலுதற் கையமிங் கில்லை
எற்கருள் புரிய வெழுந்தருள் நடேச
விருப்பொளி யின்பநா யகனே. (13)

உற்றபுன் காகக் கோடியென் ருலும்
உறுகலுக் கெதிருமோ வதுபோல்
பெற்றவென் வினையெத் தனையுநின் னுமம்
பேசிடின் எதிர்ப்படுங் கொல்லோ
முற்றவர் புகழுங் காரியா னூரில்
மோனமெய்ஞ் ஞானசற் குருவே
இற்றமூ வாசை யுற்றநன் னடேச
விருப்பொளி யின்பநா யகனே. (14)

ஒருவருக் கொன்று கொடுக்கவோர் கையு
முளனலன் ஏற்பதற் கென்னின்
பெருவலி வாணன் கைகளி னிரட்டி
பெற்றயான் பெறுவனே நின்னை
பொருவினல் வளமார் காரியா னூரிற்
பொற்புட னமர்ந்தருள் புரிவோய்
இருமையார் வினையு மிகந்தநன் னடேச
விருப்பொளி யின்பநா யகனே. (15)

வரைபல திரிந்து நதிபல படிந்து
வனம்பல வமர்ந்துதண் கடல்சூழ்
தரைபல வுழன்று மாவதென் னின்னைச்
சரண்புகா யோகியர்க் கம்மா
கரையிலாச் செல்வக் காரியா னூரிற்
கடுந்தவத் தேசிகோத் தமனே
திரையுல கேத்தத் திகழ்ந்தநன் னடேச
விருப்பொளி யின்பநா யகனே. (16)

சிறியவர்க் கியல்பு சிறுமையே செய்தல்
செயிரறு பெரியவர்க் கியல்பு
மறியவச் சிறுமை மாய்த்தினி தாள்கை
மகிதலத் தறிந்திலை கொல்லோ

பொறியமர் செல்வக் காரியா னூரில்
புலனவா வொழித்தநற் புனிதா
எறிவிலாப் பிரம வடிவநன் னடேச
விருப்பொளி யின்பநா யகனே. (17)

வட்டநாண் மலரின் வேந்தனென் றலையில்
வருந்துறக் கடவையென் றெழுதி
இட்டதீ யெழுத்து நீரெழுத் தாதற்
கியன்றநின் றிருவடி யடைந்தேன்
மட்டழி சோலைக் காரியா னூரில்
மாதவத் தலைவனுய்த் திகழும்
எட்டுநல் லுருவாய் யிலங்குநன் னடேச
விருப்பொளி யின்பநா யகனே. (18)

என்னகத் திருளா யெழுந்தகா மாதி
யிழிகுண மனைத்துமிங் கழிய
முன்னரு மொளியைப் பிரப்பிடு வதற்குன்
முகதெரி சனமதே யமையும்
கன்னலர் மருதக் காரியா னூரிற்
கண்டவ ரகத்திரு ளிரித்து
இன்னலில் புலவர்க் கிதமருள் நடேச
விருப்பொளி யின்பநா யகனே. (19)

யானென தென்னு மிழிமதி யிழந்தோர்
இழப்புறு நின்னையி துண்மை
கானமர் விலங்கின் கடையனே னின்றன்
கழலமர் பதமருள் குவையோ
ஊனமில் செல்வக் காரியா னூரில்
ஒப்பிலா வருமறைப் பொருளே
ஈனமில் ஞான மிலங்குநன் னடேச
விருப்பொளி யின்பநா யகனே. (20

கொடியது பிறப்பா மதனினுங் கொடிய
திறப்பென விசைத்தனர் பெரியோர்
தடிதர விரண்டும் நினைந்துனை யடைந்தேன்
நண்கழல் தந்தருள் குவையோ
கடியுறு சோலைக் காரியா னூரிற்
கதிரொளி யுற்றகண் மணியே
மிடியிலாச் செல்வத் திலகுநன் னடேச
விருப்பொளி யின்பநா யகனே. (21)

மன்னிய நினது மாண்டநல் லருளை
மதித்துநின் பாலுறப் பெற்று
மின்னிய லுலகின் விழைவகல் ஞான
மேவிடு மாறுசெய் தருள்வாய்
முன்னிய செல்வக் காரியா னூரில்
முழுதுணர் ஞானநற் றவனே
இன்னலில் கழலை யெற்கருள் நடேச
விருப்பொளி யின்பநா யகனே. (22)

நற்றாய் இரங்கல்

கற்புடை மங்கை கண்டுநின் பவனி
கைமலர் குவித்தன ளன்றே
பொற்புடை யன்னுள் மனமுடன் வளையைப்
பொருக்கெனக் கவர்ந்தனை யின்றே
அற்பிற விடுதல் செய்தனை யந்தோ
வையனே நின்றனக் கழகோ
எற்படு புகழை யேந்துநன் னடேச
விருப்பொளி யின்பநா யகனே. (23)

வேணவா முதலா மிழிகுணக் களைகட்
டென்மனச் செய்யினி லன்பாங்

கோணலில் நீரைப் பாய்ச்சிநற் பத்திக்
குலப்பயிர் வளர்ப்பதெந் நாளோ
சேணவிர் புகழார் காரியா னூரிற்
செகமுளோர் பவமொழித் திடவே
ஏணவிர் மொழியை யிசைத்தநன் னடேச
விருப்பொளி யின்பநா யகனே. (24)

கறைபடும் பொறிவாய்க் கலந்துபோய் விடயக்
காட்டிடை விழ்ந்திளைந் தலையும்
நிறைபடும் பொறியில் லானையாட் கொளலோ
வென்றுனை வெறுப்பவ ருளரோ
குறைபடா ஞானக் காரியா னூரிற்
கோதகல் யோகமிக் குடையோய்
இறையெனத் தருவோய் இலங்குநன் னடேச
விருப்பொளி யின்பநா யகனே. (25)

ஈரமில் நெஞ்சா லேற்பவர்க் கீயா
விழிதகைச் செல்வரைப் பாடித்
தீரமில் லடியேன் றினமிளைத் தந்தோ
சீர்மிகு நின்பத மடைந்தேன்
வீரமெய்ஞ் ஞானக் காரியா னூரில்
விரதநற் றவநிலை யுற்றோய்
ஏரவிர் முனிவ ரேத்துநன் னடேச
விருப்பொளி யின்பநா யகனே. (26)

வருபிறப் பெனும்புன் பேதைமை யிரிய
வாட்டமில் சிறப்பெனும் வீட்டை
கருவறக் காண்ப தறிவெனக் கண்டு
கண்மணி நினையுறப் பெற்றேன்
பெருநெறி பிடித்துக் காரியா னூரிற்
பெருந்தவத்தியற்றுறும் நின்றன்

இருமரைத் தாளை யிந்தருள் நடேச
விருப்பொலி யின்பநா யகனே. (27)

வெம்பிய காமக் குரோதமே லோபம்
வேரறக் களைந்துநின் னடியை
நம்பியுள் ளுருக வன்புசெய் நலனும்
நாயினேற் கருளுநா ளுளதோ
வம்பமர் சோலைக் காரியா னூரில்
வதியுநின் றிருவடி நிழலை
இம்பரி லெமக்கு மீயுநன் னடேச
விருப்பொலி யின்பநா யகனே. (28)

அன்றுநல் லாதி சங்கரன் வியாதன்
அளித்தநல் லபேதமெய்ஞ் ஞானம்
இன்றுநின் னருளா லிழுதையேற் கருளி
யெழிற்பத மடைகுறப் புரிவாய்
துன்றிநற் றவர்வாழ் காரியா னூரிற்
றுறந்தவர் போற்றுநற் றவனே
என்றருள் குவையோ ஏதமில் நடேச
விருப்பொலி யின்பநா யகனே. (29)

மறைவிலாப் பொருளை மதிக்குநற் பிரம
மாண்புறு சூத்திரங் கீதை
குறைவிலா ஞானங் குலவுப நிடதங்
கோள்பொரு ளொன்றெனத் துணிந்தேன்
கறையிலாச் செல்வக் காரியா னூரிற்
காணுநர் பவமொழித் தருள
இறையென விருந்தே யிலங்குநன் னடேச
விருப்பொலி யின்பநா யகனே. (30)

———

## 8. நடேசகுரு போற்றிப் பத்து

[காரியானூர் உயர்திரு. ந. அரங்கசாமி ஐயா அவர்கள்.]

அறுசீராசிரிய விருத்தம்

சீர்திகழும் அருணைதனில் சிறப்பினெடு
வதிந்ததனுல் செகத்தோர் போற்றும்
பேர்திகழுந் தவஞானந் தனையடைந்து
அவஞானம் பெயர வோட்டி
ஏர்திகழும் மெய்ஞ்ஞானச் செல்வனென
இயல்படைந்து எங்கு மாகிக்
கூர்திகழுங் காரியா னூர்வருநற்
குருமணியே போற்றி போற்றி. (1)

பொருளுடையார் அஃதில்லார் அனைவரையும்
ஒன்ருகப் பொருந்த நோக்கி
அருளுடனே நல்லுரைகள் அருளியவர்
நல்வழியை அடையு மாறு
தெருளுடனே அருளிமிகப் பேரருளை
நாளுளும் தெரிந்து செய்த
திருமணியே எனையும்அடி யேனுக்கொள்
சிவமணியே போற்றி போற்றி. (2)

எங்குமாய் எல்லாமாய் இயைந்தருளை
யாவர்க்கும் ஈந்து நின்ற
பொங்குபுகழ்ப் புண்ணியனே புனிதமுடைத்
தவத்தோனே பொய்ய னேன்றன்
பங்கமுடைப் பிறப்பொழிக்கத் தோன்றியருள்
பண்ணவனே பாரின் மீது

கோங்குலாங் காக்காரி யான்பதிசேர்
குருமணியே போற்றி போற்றி. (3)

பற்றதனை விட்டவரே பாரதனில்
சிறப்பெல்லாம் பரிவி னெய்தப்
பெற்றவராய்த் திகழ்வரெனப் பெரியோர்கள்
பேசுமுறை பெரிதும் ஓங்கித்
தெற்றெனநின் பால்விளங்கச் சிறியனேன்
கண்டுணர்ந்தேன் தேவ தேவே
குற்றமறு பெரியவனே அருண்மணியே
குருமணியே போற்றி போற்றி. (4)

ஓங்கருணைப் பதியதனில் ஒருபெரிய
முனிவனென உயர்ந்து நின்ற
தேங்குபுகழ் ரமணமகா ரிஷியவரும்
நின்பாலே சிறப்பு நோக்கிப்
பாங்குடனே உபசரிப்பா ரெனிலுன்றன்
பான்மையையான் பகர லாமோ
கோங்காரும் பொழில்சூழும் அருணைநகர்க்
குருமணியே போற்றி போற்றி. (5)

இன்னுத செய்தார்க்கும் இனியவே
செய்திடுநின் இயல்பு கண்டால்
மன்னுத உலகத்து மக்களெலாம்
மலரடியை மனங்கொள் ளாரோ
பன்னுளும் அடிபரவும் அடியர்மனம்
மெய்ப்பொருளிற் பதியச் செய்த
பொன்னுன தேசிகநின் பூங்கழல்கள்
அநுதினமும் போற்றி போற்றி. (6

பாரியெனும் வள்ளலைப்போல் பாரின்மிசை
மெய்ப்பொருளைப் பலர்க்கும் ஈந்தாய்

பாரிதனின் நின்றனைப்போல் மெய்ஞ்ஞானம்
யாவரே பலர்க்கு மீந்தார்
சீரியநற் புகழ்சேர்ந்து பெருமையையும்
நின்னுலே சேர்ந்த தான
காரியா னூர்வருநற் சற்குருநின்
கால்மலர்கள் போற்றி போற்றி. (7)

கட்டளையுந் தாலாட்டும் கதியருளும்
போதமுநல் துறவு நூலும்
இட்டமுடன் சதகந்தீ பஞ்சூடா
மணியினெடு இயம்பு கின்ற
கட்டமறு கைவல்யம் கீதைவா
சிட்டமுதல் கவினுர் நூல்கள்
சிட்டருக்குப் பகர்ந்தருளுந் தேசிகநின்
திருவடிகள் போற்றி போற்றி. (8)

தில்லையெனு மாதலத்தில் பெருமையொடு
சேர்ந்து நின்று சீவரெல்லாம்
அல்லலறுத் தடியடைய ஆநந்த
தாண்டவத்தை அருளு கின்ற
எல்லையிலாப் புகழ்படைத்த எம்பெருமான்
நடராசன் இனிய பேர்கொள்
நல்லமகா நடேசகுரு நளினமலர்த்
திருவடிகள் நாளும் போற்றி. (9)

கரங்குவித்து வணங்குகின்றேன் கருத்திலுனை
எந்நாளும் கருதி நிற்பேன்
சிரங்குனிந்து போற்றுகிறேன் சிறியனேன்
பிழைகள்மிகச் செய்திட் டாலும்
அரங்கனெனப் பேர்படைத்திவ் வகிலமதில்
திரிகின்ற அடியே னை
குரங்குமனச் சிறியேனை விட்டிடேல்
குருமணியே போற்றி போற்றி. (10)

# 9. நடேசகுரு பஞ்சரத்தினம்

[சிதம்பரம் பரஞ்சோதி ஆசிரமத் தலைவர் உயர் திரு. விசுவநாத சுவாமிகள் அவர்கள்.]

எழுசீராசிரிய விருத்தம்

சீரோங்கு மருணையம் பதியோங்கும் ஈசான்யச்
செய்யநல் திரும டத்தில்
பேரோங்க வேமடத் தலைவனெனச் சிறப்புடன்
பெட்போங்க விற்றி ருந்து
ஏரோங்கு மறைமுடிவின் பொருளதனை அடியவர்கள்
இனிதறிந் தியல்பி னோங்கக்
காரோங்கு பண்புடன் இனிதமர்ந் திருந்திட்ட
காருண்யன் அடிகள் போற்றி. (1)

கருவண்ணு தருளெனக் கென்னவே பண்பொடு
கருத்தமைத் திட்ட பேர்க்கு
ஒருவண்ணுன் துணியழுக் கதனையே கருத்தொடு
உவந்துநீக் கிடுதல் போலக்
குருவண்ணுர் பிறப்பழுக் கடுத்துவா ராநிலை
கொடுத்துமே மகிழ்வி னுண்டார்
திருவண்ணு மலையிருந் தருளந்த மெய்ஞ்ஞானச்
செல்வன்றன் அடிகள் போற்றி. (2)

காரியான் ஊரெனுங் கவின்பெறும் ஆதிநல்
கன்னியத் துறையில் மேவிப்
பேரியான் ஒழிந்தருள் விட்டினைப் பெற்றிடப்
பேரிதருள் என்ற பேர்க்கு

நேரியான் ஈவனிர் நேர்ந்திதைக் கொளுமென
நின்றருள் புரிந்த ஞானச்
சீரியான் நடேசப்பேர் சேர்ந்தமெய்ஞ் ஞானவான்
திருவடி போற்றி போற்றி. (3)

நாடகம் போலடி யாரென நடித்துல
கதனையே நாளும் ஏய்த்துப்
பீடகத் தடையாத பேயராம் பிறரைப்போல்
உலகினிற் பிறங்கி டாமல்
ஓடகத் தொருபொருள் பொன்னெடு மோடென
உலகினில் வெறுத்து நின்ற
வீடகத் தொருவனும் மெய்ஞ்ஞான நடேசனுர்
மெல்லடி போற்றி போற்றி. (4)

மாமுனி வோர்க்கெலாம் மாமுனி என்னவே
மாநிலந் தன்னில் நின்று
தாமினி துணர்ந்திடும் ஒருபொருள் தனைநனி
சார்ந்திடுஞ் சிட்ட ருக்கு
ஓமென உரைத்தருள் ஒருவனும் நடேசப்பேர்
உத்தமன் அடிகள் தம்மை
நாமினி வாழ்த்துவாம் அன்னவன் மலரடி
நாளுமே போற்றி போற்றி. (5)

———

# 10. நடேசப் பத்து

[கருப்பக்கிளர் உயர்திரு சு. அ. இராமசாமிப் புலவர் அவர்கள்.]

எண்சீ ராசிரிய விருத்தம்

சீராருந் திருவருணைத் தலத்தில் நன்கு
திகழ்ந்திடும்ஈ சானியநல் மடத்த மர்ந்து
பேராருந் தலைவனென அடியார் போற்றப்
பெரிதருளைப் புரிந்தவர்க்குப் பேணுந் தூய
நீராரும் மறைமுடிவுப் பொருளை நாளும்
நேர்மையுடன் உரைத்திருந்த நிமல ஞான
ஏராரும் நடேசகுரு நாதன் தாளை
என்றுமுளங் கொண்டுமிகப் பணிகு வோமே. (1)

திருமடத்தின் தலைமையொடு திகழ்தல் தானும்
தீதான குணமதனைச் சேர்த்து மேலும்
கருமடத்தின் நிலையளித்துக் கடலாற் சூழ்ந்த
காசினியிற் பிறப்பதனைக் காட்டா நிற்கும்
ஒருமடத்தின் தொடர்பு நமக் குதவா தென்று
உயரியநற் பான்மையுடன் உலவி நின்ற
குருமடத்தின் நடேசகுரு நாதன் தாளைக்
கொண்டுளத்தில் என்றும்மிகப் பணிகு வோமே. (2)

சீரியாம் பெறற்கிந்தச் செகத்தில் தோன்றிச்
சிறப்புடனே ஞானவா ரிதியாய் மேவிக்
காரியான் ஊர்தவிலே கடைசி நாளில்
கருணையுடன் அமர்ந்துநல கலைசேர்ந் தோங்கும்
பேரியான் பெறற்கருளைப் பெரிதும் ஈந்து
பெருமையுடன் நூலதனைப் பேசி நின்ற

நேரியான் நடேசகுரு நாதன் தாளை
நிதமும்உளம் கொண்டுமிகப் பணிகு வோமே. (3)

நான்மறையின் பொருளதனை நன்கு ணர்ந்து
நாளுமகம் உள்ளாகி ஞானி யாகித்
தான்மறையின் பொருளதனைச் சார வேண்டும்
தகுதியுள்ள குருவென்று சார்ந்த பேர்க்கு
மேன்மறையின் பொருளதனை மிகவ ளித்து
மேலான வழியதனைப் பலர்க்குங் காட்டும்
நானிலத்து நடேசகுரு நாதன் தாளை
நாளும்மிக உளங்கொண்டு நாடு வோமே. (4)

தாயினுநல் கருணைமிகு மூர்த்தி யாகித்
தாரணியில் அடியவர்கள் பிறவி போக்க
மேயவயம் ஆத்மாவே பிரமம் என்னும்
மேன்மறையின் பொருளதனை விரித்து ரைத்துத்
தூயனென உலகோர்கள் சொல்லு மாறு
துலங்கிநின்ற பெரியோனுந் துப்பு வாய்ந்த
ஏயபுகழ் நடேசகுரு நாதன் தாளை
எந்நாளும் அகமுருகிப் போற்று வாமே. (5)

செப்பரிய நான்மறையின் பொருள்கள் தம்மில்
சிறத்தமகா வாக்கியத்தில் ஒன்ற தான
ஒப்பில்புகழ் உயர்ந்தமகா வாக்கி யத்தை
உண்மையுடன் பலநாளும் அனுசந் தித்து
இப்புவியில் பலகாலம் இலங்கி நின்று
எடுத்துரைக்க அரியநல சிறப்புப் பெற்ற
தப்பில்புகழ் நடேசகுரு நாதன் தாளைத்
தவறுமல் நாள்தோறுஞ் சாற்று வாமே. (6)

அறம்பொருளோ டின்பமெலாம் அகில மீதில்.
அடைந்தாலும் பயனில்லை அருமை வாய்ந்த

திறம்பொருந்தும் மகாவாக்கியச் சிறப்ப தான
சீராரும் பிரஞ்ஞானம் பிரமம் என்னும்
மறம்பொருந்தும் மறைமொழியின் மாண்பு மிக்க
மகிமைதனை அறியாத மக்கட் கென்று
நிறம்பொருந்த அதனையருள் நடேச ஞான
நிமலனடி புகழ்ந்தேத்தி வணங்கு வோமே. (7)

உலகிலுள நூல்கள்பல உணர்ந்திட் டாலும்
உயர்வான கதியடைய உதவா தென்று
அலகில்புகழ் உடையமகா வாக்கி யத்தில்
அமைந்திருக்கும் பெருமைதனை அறிந்து நின்று
இலகுகிற தத்வமசி என்னுந் தூய
எழில்மறையின் பொருளதனை யார்க்கு மீந்து
நலகருணை மூர்த்தியென் நாளும் நின்ற
நடேசகுரு நாதனைநாம் நாடு வோமே. (8)

அருணைதனில் மடபதியாய் அமைந்து நின்றும்
அந்தோவீ தவலமென அகத்திற் கொண்டு
தருணமுடைப் பக்குவர்க்கு அருளைச் செய்யத்
தரணிதனில் காரியா னூரி லேகிக்
கருணைதனை மிகச்செய்து பலர்க்கும் நல்ல
கதியருளும் எம்பெருமான் தூய ஞானப்
பொருளையருள் நடேசகுரு பொன்னூர் பாதம்
புந்திதனில் பதித்தென்றும் புகழு வாயே. (9)

ஞானமுடைத் தபோதனர்கள் நண்ணி வாழ்ந்த
நற்பதியாம் அருணைதனை நாடி நின்று
மோனமதை அடைந்துமிகு முயற்சி யோடு
முத்தியையும் அடைந்திட்ட முதல்வ னென
தானமுடைப் பெரியவனுய்ச் சகத்தோர் போற்றும்
தண்ணருள்சேர் நடேசகுரு நாதன் தாளை

ஈனமுடைப் பிறவிதனை ஒழித்துக் கட்ட
எப்பொழுதும் அகந்தனிலே இருத்திக் கொள்ளே. (10)

நூற்பயன்

சீரிலகு நடேசகுரு நாதன் தாளைச்
சிந்தைதனில் எப்பொழுதும் வந்தித் தேதான்
நேருறவே போற்றிமிகப் பணிவா யாகில்
நினைத்தவெலாங் கைகூடும் நீணி லத்தில்
ஏருறவே பெருவாழ்வை இயைந்து நிற்பாய்
ஈதலாற் பரஞான இன்புஞ் சேர்வாய்
தாரிலகு மைந்தாநின் றனக்கே இந்தச்
சற்குருவின் பேரருளுஞ் சாருந் தானே. (11)

---

# 11. நல்லுரைத் திரட்டு

அறுமுகன் துணை

உற்றதுணை இல்லை உடன்பிறப்புத் தானில்லை
பெற்றெடுத்த மாதா பிதாவுமில்லை—உற்றதுணை
ஆரென் றிருந்தேன் அறுமுகவன் ஓடிவந்து
நானென்று நின்றான் நமக்கு.

வேலுமயிலுந் துணை

எங்கெங் கிருந்தாலும் எவ்விடத்திற் சென்றாலும்
துங்கமயி லும்வேலும் தோன்றுமே—திங்கள்
மலைக்குமரா வேணியான் மைந்தாதென் தேனீ
மலைக்குமரா நீயோடி வா.

வெற்றிவேலுற்ற துணை

புனமேவிய தினைகாத்திடு நயனும்புய வவிபால்
மனமேவிய மயல்மீறிடு குகனுர்கர வடிவேல்
தினமேயவர் பததாமரை திரமேயெனும் அடியார்
அனைவோர் வினை பிணியாவையும் அடிவேர்கெலிவிடுமே.

முருகா என்போர் அடையும் பலன்

முருகா எனஉனை ஓதுந் தவத்தினர் மூதுலகில்
அருகாத செல்வம் அடைவார் வியாதி அடைந்துநையார்
ஒருகால மும்துன்பம் எய்தார் பரகதி உற்றிடுவார்
பொருகாலன் நாடு புகார்சம ராபுரிப் புண்ணியனே.

திருநீறணியாதவர்

செய்யதிரு நீறுதொட்டுத் தரியாதார்
பெருஞ்செல்வம் சிதையும் அன்னுர்
கொய்யுளைய *பரித்திரளும் †கரித்திரளும்
மறுமன்னர் கொள்வர் வேட்ட
தையலொழிந் தருமகவும் ‡தணந்துபெரும்
பிணியுடனுய்ச் சரிப்ப ரன்றி
மெய்யின்உறுப் புக்குறைந்து புலையரினும்
கடைப்பிறவி மேவு வாரால்.

நல்வினையே செல்வத்திற்கு விதை

முற்பிறப்பில் நல்ல முயலாதார் செல்வத்துக்
கிப்பிறப்பில் ஆசைப்பா டெய்திடுதல்—பொற்புடனே
[1]விச்சிட்டு வேளாண்மை செய்யான் விளைவுக்கு
[2]நச்சிட்ட வாறெனவே நாடு.

கடன்

கடன்என்று வாங்குமொரு பொருளைக் கொடாதவன்
கருதிச்செய் புண்ணியம் எலாம்

---

*குதிரைக் கூட்டம் †யானைக் கூட்டம் ‡நீங்கி
1. விதை தெளித்து. 2. விரும்பிய.

கடனென் றளித்தவனை அடைவதல் லாமலும்
கடனைக்கொ டாதி றக்கின்

கொடியன்என இம்மையில் பேர்பெற்று மறுமையில்
கோதிலா மாடா கவும்
கூலியா ளாகவும் கழுதையா கவும்எழில்
குதிரையா கவும்வேலை செய்

அடிமையாகவும் அரிவை யாகவும் சனனமாய்
அத்தனிக னிடம்உ ழைப்பார்
ஆதலால் கடனென்ப தாகா தெனச்சொலுவர்
அருளுற்ற முனிவர் கண்டாய்

மடல்விரிந் திடுகொன்றை அணிகின்ற தேவனே
மகிபன்முத் தைய மதவேள்
மனதில்அநு தினமும்நினை தரும்இமய மலைவனிதை
மருவுபழ மலைநா தனே.

இருந்தாலும் துன்பம் இல்லாவிட்டாலுந் துன்பம்

தனமில்லை யாகிலோ துன்பமாம் தனம்இருந்
தாலோம கதுன்பமாம்
தனயரிலை யாகிலும் துன்பமாம் தனையர்உண்
டாகிலோ மகாதுன்பமாம்

மனைவியிலை யாகிலுந் துன்பமாம் மனைவியொடு
வாழ்வது மகாதுன்பமாம்
வாகனம்இ லாமல்வழி ஏகவும் துன்பமது
வைத்தால் மகாதுன்பமாம்

தினமுங் கடன்பிறக் காதுதுன் பம்கடன்
தீர்ப்பது மகாதுன்பமாம்
செகதுரத் தனமிலாத் துன்பமாம் செங்கோல்
செலுத்தவும் மகாதுன்பமாம்

வினயகுணம் மேவுநல் லோர்தொழும் பாதனே
மெய்ம்முத்து லிங்கமதவேள்
வேணதருள் வாணிபுரி பெரியநா யகிமகிழ்
விரிந்தீஸ் வரக்கட வுளே.

# அறிவுரை

1. "ஓம்" என்னும் பிரணவ மந்திரத்தை எப்பொழுதும் சொல்லிக்கொண்டிருங்கள். எல்லா வகையான மந்திரங்களும் ஓம் என்பதில் அடங்கியிருக்கின்றன.

2. நீ உன்னுடைய முழு மனதையுங் கடவுளிடஞ் செலுத்திச் செய்யவேண்டிய கடமைகளை யெல்லாம் செய். அவ்வாறு செய்வதனால் கடமையின் பலன் முழுவதும் உன்னைப் பற்றமாட்டா.

3. உலகில் பந்தம் என்பது பெண், பொன் இவ்விரண்டினால்தான் உண்டாவதாகும்.

4. உலகப் பற்றுள்ளவர்கள் கடவுளை எண்ணி உண்மையான அன்போடு போற்றமாட்டார்கள்.

5. எவன் உண்மையான ஞானத்தை அடைந்திருக்கிறானோ அவன் பேசுவதையும் வீணாக வாதஞ் செய்வதையும் விட்டுவிடுகிறான்.

6. ஆத்மாவே ஆத்மாவை அறிகிறது. சீவாத்மாவானது ஆணவத்தினால் தன்னைத் தனிமையாகப் பாவிக்கிற வரையில் பரமாத்மாவை அறிய முடியாது.

7. சீவாத்மா ஆற்றைப் போன்றது. பரமாத்மா பெருங் கடலைப் போன்றது. சீவாத்மாவானது பரமாத்மாவாகிய பெருங் கடலில் மூழ்கி ஒன்றாகக் கலந்துவிடுகிறது.

8. பிரமஞானம் என்பது நான் என்பது முற்றிலும் ஒழிந்து, சமாதியில் பிரமானுபவம் உற்று அதைப் பற்றி உள்ளது இல்லது என்று ஒன்றுங்கூற முடியாமல் மௌனமாக இருக்கும் நிலையாகும்.

9, ஒருவன் கடவுளிடம் அன்பு பாராட்டினால் வைராக்கியம், நித்தியா நித்யவஸ்து விவேகம் இவைகளெல்லாம் அவனுக்குத் தாமாகவே வரும்:

10. கடவுளிடம் பக்தி செலுத்தும்பொழுது பக்திக் கடலில் மூழ்கவேண்டும். அவ்வாறு மூழ்காமல் மேலே மிதந்து கொண்டிருந்தால் அடியில் இருக்கும் விலையற்ற மணிகளை அடைய முடியாது.

11. கடவுளே நித்தியம்; மற்றவைகளெல்லாம் அநித்யம் என்னும் மெய்யறிவில்லாமல் ஒருவன் நூல்களைப் படிப்பதாலும் சொற்பொழிவுகளைச் செய்ததாலும் எத்தகைய பயனையும் அடைந்துவிட முடியாது.

12. இல்லறத்தில் இருப்பவன் சமயம் ஏற்படும்பொழுதெல்லாம் தனிமையான இடத்திற்குப் போய்க் கடவுளைத் தியானஞ்செய்து உண்மையான கடவுட் பக்தியையும் மோட்ச முயற்சியையுஞ் செய்யலாம்.

13. கடவுள் எல்லாப் பொருள்களினும் நிறைந்திருக்கிறார் என்பது உண்மை. ஆனால் அவர் மெய்யன்பர்களுடைய உள்ளத்தில் மிக அதிகமாக நிறைந்திருக்கிறார்.

14. இவ்வுலகத்தில் இல்லறத்தானாக இருந்தாலும்சரி; துறவறத்தானாக இருந்தாலுஞ்சரி; அதனால் ஒன்றுந் தீமையில்லை. மனத்தைமட்டுங் கடவுளிடத்தில் நிலைநிறுத்த வேண்டும்.

15. கடவுளினுடைய திருப்பெயரை அன்புடன் கூறினால் தீவினையாளனும் வீடுபேற்றை யடைவான்.

16. அறிவற்ற எவன் "நான் தீவினையாளன் நான் தீவினையாளன்" என்று கூறிக்கொண்டிருக்கிறானே அவன் தீவினையாளனாகவே முடிந்துவிடுகிறான்.

17. இவ்வுலகில் மனிதன் விரும்பும் விளையாட்டுப் பொருள்களில் மிகவும் பயங்கரமான பொருள் பெண்தான்.

———

# பேசுவதற்குக் குறிப்புகள்



1. அளவாகப் பேசுக
2. அன்பாகப் பேசுக
3. இடமறிந்து பேசுக
4. இனிமையாகப் பேசுக
5. உண்மையே பேசுக
6. எண்ணிப் பேசுக
7. நன்மையே பேசுக
8. சமயம் அறிந்து பேசுக
9. மெதுவாகப் பேசுக
10. பேசாமல் இருந்தும் பழகுக

# செல்வத் திறவுகோல்

தெய்வத் தன்மை பொருந்திய இந்நூலினால் அருட் செல்வம், பொருட் செல்வம், உடல்நலச் செல்வம், கல்விச் செல்வம், மக்கட் செல்வம் முதலிய சிறப்புக்களைப் பெறுவதோடு எல்லாவகையான நன்மைகளையும் மேன்மைகளையும் அடையலாம். இந்நூலைப்படிக்க வேண்டியதுகூட இல்லை. வீட்டில் வைத்திருந்தாலே எல்லா வகையான சிறப்புக்களும் உண்டாகும். இந்நூலைப் பெற்றுப் பலபேர் சிறந்த நன்மைகளை அடைந்திருக்கிறார்கள். நல்வினை உள்ள வர்களுக்குத்தான் இந்நூலைப் பெறுவதில் மனஞ் செல்லும்.

இதன் விலை ரூ 1-50

## காரிய சித்தி மாலை

பத்துக்காசு.

கிடைக்குமிடம்:

1. சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
   *1/140*, பிராட்வே, சென்னை-*1*.
2. *98*, கீழைத் தேர்த் தெரு, திருநெல்வேலி-6.
3. சைவ சித்தாந்தப் புத்தக சாலை,
   *51*, திண்டுக்கல் ரோட், மதுரை.
4. இ. மா. கோபால கிருட்டிணக் கோன்,
   புத்தகசாலை வடக்குச் சித்திரை வீதி,
   மதுரை.

பாரி அச்சகம், சென்னை-1.